

வித்துவான்

**க. கதிரேசன்,** எம்.ஏ.,பி.எட்.,

இந்நூலின் உரையாசிரியர் வித்துவான் க. கதிரேசன் எம்.ஏ.,பி.எட்., திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் (1955-59) பயின்றவர். 1958ல் சென்னை மாணவர் மன்றம், காரைக்குடி திருக்குறள் கழகம் நடத்திய மாநில, கல்லூரிக் கவிதைப் போட்டிகளில் முறையே 4ஆம், 3ஆம் பரிசு பெற்றவர். 1959-1994 வரை குன்றக்குடி ஆதீனத்துக் குன்றக்குடி த.க.கு. மே.பள்ளியில் தமிழாசிரியர் பணி, 1994-2000 வரை பிள்ளையார்பட்டி வேதசிவாகம பாடசாலையில் சாத்திரம், திருக்குறள், திருமுறையாசிரியர்.

27.03.1994-ல் "குன்றக்குடி ஆதீனப் புலவர்" 02. 10. 2006 ல் "சைவத் தமிழ்மணி" 16.08.2009 ல் "சித்தாந்தச் செல்வர்" 03.06.2012 ல் "தமிழாகரர்" 28.07.2013 ல் "சைவத் தமிழறிஞர்" விருதுகள் பெறுதல்.

வெளியிட்டநூல்கள் - உரை நூல்கள் : ஸ்ரீ தெய்வசிகாமணி தேசிகர் நான்மணி மாலை, இவர் மீதிலான சிற்குருமாலை ; அருள்தரு வீரமாகாளி அம்மன் பாமாலை, அருள்தரு சண்முகநாதப் பெருமான் பாராயணப் பாமாலை, அருள்தரு தோகையடி விநாயகர் துதிக்கை மாலை, "சிங்கைச் சிலேடை வெண்பா" போற்றி மடக்குப் பதிகம், பாம்பன் சுவாமிகளின் குன்றக்குடிப் பதிகம், பூவாளூர்த் தலப்புராணம், பூவாளூர் சி. தியாகராச செட்டியாரின் தி. மீசு. பி. அந்தாதி, திருவாரூர்பாதி திருவொற்றியூர்பாதி வெண்பா மாலை, திருச்சிற்றம்பல வெண்பா அந்தாதி, திருவாரூர் மருந்து வெண்பா மாலை, அருள்தரு பெருந்திருப்பிராட்டி அந்தாதி, பூவாளூர் அருள்தரு குங்குமசுந்தரியம்மை உடனாய திருமூலநாதர் திருக்கோயில் பதிகங்கள். தொகுப்பு : விநாயகர், முருகன், அம்மை, அப்பன் மீது அருளாளர் வாக்கால் 1008 போற்றி, திருக்கோயில் வழிபாடு, கவிதை : அருள்தரு கற்பக விநாயகர் பதிகம், அருள்தரு சண்முகநாதப் பெருமான் மாத வார பதிகங்கள், அருள்தரு குங்கும சுந்தரி அம்மை பதிகம், அருள்தரு வீரமாகாளி அம்மை பதிகம், கல்லூரிப் பாடநூலாகவும், எம்.ஃபில் ஆய்வேடாகவும் அமைந்த நெஞ்சுவிடுதூது. நினைவு மலர்கள் : தோசுவர்ப் பண்ணை மு. சுப்பிரமணியன் செட்டியார், இனக்காரியக்காரர் அ.ந. சம்பந்தஞ் செட்டியார் மீதில். கட்டுரைகள் : அருள்நெறித்தந்தை குன்றக்குடி அடிகளார் அவர்களின் வரலாறு கூறும் "காலமாய் நிற்கும் காட்சி" இதழ்களில் கருத்தரங்கங்களில் இடம் பெற்ற கட்டுரைகள். ஸ்ரீ குமரகுருபரர் அடிச்சுவட்டில் தன் முன்னேற்றக் கருத்துகள், ஸ்ரீ குமரகுருபரர் அருந்தமிழில் சைவ சித்தாந்தம்.

**கேட்டல், படித்தல், எழுதுதல் மட்டுமே பணி.**

**பூவாளூர்**

# அருள்தரு குங்குமசுந்தரியம்மை உடனாய திருமூலநாதர் திருக்கோயில் பதிகங்கள்



தொகுப்பு, உரைவிளக்கம்

**குன்றக்குடி ஆதீனப்புலவர் க. கதிரேசன்,** எம்.ஏ.,பி.எட்.,

பூவாளூர்.

பூவாளூர்

# அருள்தரு திருமூலநாதர் பதிகம்

# அருள்தரு குங்குமாம்பிகை பதிகங்கள்

ஆசிரியர்கள்

சிவத்திரு. **ஆர். வெங்கடேசக்குருக்கள்**

பூவாளூர்ச் சிவன் கோயில் அர்ச்சகர்

அடஞ்சூர் வித்துவான் **கா. துரைசாமி பிள்ளை**

பூவாளூர் சைவ சித்தாந்த சங்க உறுப்பினர்

வித்துவான் **க. கதிரேசன்** எம்.ஏ., பி.எட்.,

பூவாளூர்

உரை விளக்கம், அச்சு ஏற்றுப் போற்றுதல்

குன்றக்குடி ஆதீனப்புலவர், தமிழாகரர், சைவத் தமிழ்மணி

சைவத் தமிழ் அறிஞர், சித்தாந்தச் செல்வர்

வித்துவான் **க. கதிரேசன் எம்.ஏ; பி.எட்.,**

பூவாளூர் - 621 712

அலைபேசி : 0 98651 93754

## உள்ளுறை





## தோரண வாயில்

அருள்தரு குங்குமசுந்தரி அம்மை உடனாய திருமூலநாதப் பெருமானின் அருள்வளம் கொழிக்கும் திருவூர் பூவாளூர். இது செந்நெல்லும் செங்கரும்பும் வாழையும் செழித்த நன்செய் நிலவளமும், பங்குனி ஆற்றின் நீர்வளமும், பல்வேறு வகைகளில் உழைக்கும் மனிதவளமும், திருவருளும் அறிவாற்றலும் கனிந்த குருமகா சந்நிதானங்களும் பேரறிஞர்களும், கலந்துகொண்டு வளர்த்த 105 ஆண்டுகள் வயதுடைய சைவ சித்தாந்தசங்கச் சிறப்பும் கொண்டது.

திருச்சிராப்பள்ளி மாவட்டம் திருத்தவத்துறை என்கிற இலால்குடி வட்டம் இலால்குடியிலிருந்து 5 கி.மீ.தொலைவு வடக்கே அரியலூர்ச் சாலையில் உள்ள பேரூராட்சி இப் பூவாளூர். இவ்வூர்த் தலபுராணம் இவ்வூரினைக் காமர்பதி, மன்மதபுரம், புட்பதனுபுரம், கல்யாணபுரம் என்று குறிக்கிறது. மலரம்புகளையுடைய மன்மதன் மீண்டும் உயிர்பெற்ற ஊர் என்று பொருள் தரும் பூவாளியூர் என்பது இந்நாளில் பூவாளூர் என்று மருவியது. மேலும் இவ்வூரினை, இவ்வூர் அருள்தரு ஐயனார் திருக்கோயில் போராடிக் கூத்தருக்கு வலப்பால்உள்ள திருமதிலின் மேற்பகுதியில் உள்ள கல்வெட்டு ஒன்று **எழிலூர்** என்று குறிக்கிறது.

இங்குள்ள அருள்தரு குங்குமசுந்தரியம்மை உடனாய திருமூலநாதர் திருக்கோயில் கி.பி 7ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட பெருமையுடையது. கி.பி 7ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியினராகிய திருஞானசம்பந்தர் இங்குச் சிலநாள் தங்கியிருந்து இப்பெருமானை வணங்கியதைச் சேக்கிழார் தமது பெரியபுராணம் செய்யுள் எண் 2250 இல் குறிப்பிடுகிறார். அதே காலத்தவரான அப்பரடிகள் தமது உஞ்சனை என்று தொடங்கும் சேத்திரக் கோவைத் திருத்தாண்டகத்தில்

மாதானம் என்றுகுறிப்பது இவ்வூரையே ஆகும் என்று அட்டாவதானம் பூவை கல்யாணசுந்தர முதலியார் எழுதியுள்ள பூவாளூர்ப்புராணக் கத்தியரூபத்தில் (உரைநடையில்) இப்பாடலைத் தந்து பூவாளூர் வைப்புத் தலம் என்று கூறுவாருமுளர் என்ற அடிக்குறிப்பும் தந்துள்ளார்.

கி.பி. 12 ஆம் நூற்றாண்டினராகிய தெய்வச் சேக்கிழார் பெரிய புராணம் செய்யுள் எண் 2250 இல் இவ்வூர்ப் பெயர் களுள் ஒன்றான காமர்பதி என்பதைக் குறிப்பதுடன் திருஞான சம்பந்தர் இங்குச் சிலநாள் தங்கி வழிபட்டதைக் குறிக்கிறார். கி.பி 15-ஆம் நூற்றாண்டினராகிய அருணகிரிநாதர் இங்கு வந்து, "காலன் வேற்படை" என்ற திருப்புகழ் பாடி வழிபட் டுள்ளார். கி.பி. 18-ஆம் நூற்றாண்டினராகிய திருவாவடுதுறை ஆதீனத்துக் கவிராட்சச கச்சியப்ப முனிவர்பிரான் இவ்வூர்த் தலபுராணமாகிய பன்னலம் பொதுளிய பூவாளூர்ப் புராணத்தை 885 செய்யுள்களில் இயற்றியுள்ளார். கி,பி.19ஆம் நூற்றாண்டினராகிய மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் 100செய்யுள்களில் இயற்றியஅரிய பூவாளூர்ப் பதிற்றுப்பத்து அந்தாதியில் கிடைத்துள்ளன 25 செய்யுட்களே. பூவை அட்டாவதானம் கல்யாணசுந்தர முதலியார் அவர்கள் பூவாளூர்ப் புராணத்தை உரைநடை வடிவில் 146 பக்க அளவில் எழுதியுள்ளார். இது 1851 இல் வெளிவந்தது. மேலும், 1947 இல் பூவாளூர்க் கோயில் வரலாறு என்றதலைப்பில் உரைநடையில், இலால்குடி தமிழாசியர் பஞ்சநதம்பிள்ளை அவர்கள் தலச்செய்திகள் தந்துள்ளார்.

"பூவாளூர்த் திருக்கோயில் பதிகங்கள்" என்ற தலைப்பில் உள்ள இந்நூலில் பூவாளூர் அருள்தரு குங்கும சுந்தரியம்மை உடனாய திருமூலநாதர் திருக்கோயில் தேவஸ்தான சிவாச் சாரியார் சிவத்திரு. ஆர்.வெங்கடேச குருக்கள் அவர்கள் இயற்றியதும் இலால்குடி வட்டம் திருமங்கலம், பூவாளூர் வார வழி பாட்டுத் திருக்கூட்டத்தார் வெளியிட்டதுமாகிய 1.அருள்தரு திருமூலநாதர் பதிகம் 2.அருள்தரு குங்குமாம்பிகை பதிகம், 3. இவ்விறைவன் இறைவி பற்றிய இசைப்பாடல்கள் உள்ளன. மேலும், பூவாளூர் சைவ சித்தாந்த சங்கத்தின் உறுப்பினர் ஆகிய தஞ்சை அடஞ்சூர் வித்துவான் கா.துரைசாமி பிள்ளை அவர்கள் இயற்றி, தஞ்சை செந்தலை பெருநிலக்கிழார் தி.ஆட்கொண்டாபிள்ளை அவர்கள் 1915 இல் பதிப்பித்த பூவாளூர் அருள்தரு குங்குமாம்பிகை பதிகத்தில் நமக்குக் கிடைத்த ஆறுபாடல்கள் மட்டும் இதில் இடம் பெற்றுள்ளன. அடுத்து, என் இளவல் க. முத்துக்குமரன் பி.எஸ்சி. 606202 கள்ளக்குறிச்சி விதைசுத்திகரிப்பு நிலைய மேலாளர் 1 ஆகப் பணியாற்றியபோது 29.10.2000இல் வெளியிட்ட நான் இயற்றிய பூவாளூர் அருள்தரு குங்கும சுந்தரி அம்மைபதிகம் ஆகியன இதில் உள்ளன,



இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிச் சிறப்பித்துள்ள பெரும்புலவர். சி.சிவக்கொழுந்து எம்.ஏ., எம்.எட்., (அமைச்சர் திருச்சிராப்பள்ளி தமிழ்ச் சங்கம்), ஆன்மீக செல்வர். கவிஞர் புலவர் புவியரசு (செயலர், திருத்தவத்துறை (இலால்குடி) தமிழ்ச்சங்கம்) ஆகிய இருவர்க்கும் என் இதயம் கனிந்த நன்றியும் வணக்கமும் உரியன. இந்நூலைச் சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்துள்ள ஸ்ரீ நிதி அச்சக உரிமையாளர் P. செந்தாமரைக்கண்ணன் அவர்கட்கு நன்றி. இவற்றைப் படிப் போர் பொருள் உணர்ந்து படிக்க வாய்ப்பாக, செய்யுள்களைச் சந்தி பிரித்து, குறிப்புரை, பொழிப்புரை, தலபுராணச் செய்தி, விளக்கம், இலக்கணக் குறிப்பு ஆகியனவற்றுடன் இந்நூலைத் தொகுத்துத் தந்துள்ளேன். அனைவரும் உணர்ந்து ஓதித் திருவருள் பெற்றுப் பெருவாழ்வு வாழவேண்டுகிறேன்.

அன்புள்ள

07-02-2016 **க.கதிரேசன்.**

பூவாளூர் குன்றக்குடி ஆதீனப்புலவர்

# அணிந்துரை

பெரும்புலவர் **சி. சிவக்கொழுந்து**
அமைச்சர்
திருச்சிராப்பள்ளித் தமிழ்ச்சங்கம்

கெழுதகை நண்பர் பூவாளூர் தெய்வத்திரு புலவர் ப. முருகேசன் அவர்கள், தன் உடன்பிறவாத் தம்பி, பூவாளூர் குன்றக்குடி ஆதீனப்புலவர் க. கதிரேசன் அவர்களைச் சுமார் 20 ஆண்டுகட்கு முன் எனக்கு அறிமுகம் செய்து வைத்தார். அன்று முதல் குன்றக்குடி ஆதீனப்புலவர் என் அருமை நண்பர். இவர் மேல்நாட்டு இலக்கியங்களிலும், அறிவியல் செய்திகளிலும், தமிழ் இலக்கண இலக்கியங்களிலும், ஆழ்ந்த புலமை மிக்கவர். இதனை இவர் எழுதிய உரைநூல்களில், கட்டுரை நூல்களில் காணலாம்.

குன்றக்குடி ஆதீனப்புலவர் அவர்கள், தான் பிறந்த பூவாளூரில் எழுந்தருளி அருள்பாலிக்கும் இறைவன் இறைவி மீது அருள்தரு திருமூலநாதர் பதிகம், அருள்தரு குங்குமாம்பிகை பதிகம் என்று மொத்தம் நான்கு பதிகங்களையும், இசைப் பாடல்களையும், இந்நூலில் தொகுத்துத் தந்துள்ளார். இவற்றை இயற்றியுதவிய வர்கள் இச்சிவன் கோவில் பூசகர் சிவத்திரு. ஆர். வெங்கடேச குருக்கள், பூவாளூர் சைவ சித்தாந்த சபை உறுப்பினர் அடஞ்சூர். வித்துவான் கா. துரைசாமி பிள்ளை மற்றும் குன்றக்குடி ஆதீனப்புலவர் ஆகியோர். இத்தொகுப்புப்பணி, தன்ஆர்வப் பணியாகும். இவற்றை பதிப்பித்து வழங்கும் குன்றக்குடி ஆதீனப் புலவர் க. கதிரேசன் அவர்களை வெகுவாகப் பாராட்டாமல் இருக்க முடியாது.

இப்பதிக ஆசிரியர்கள் திருமுறைகளிலும், திருவிளை யாடற் புராணம், பெரிய புராணம் முதலியவற்றில் ஆழங்கால் பட்டவர்கள் என்பதனை, உரைமூலம் அறியமுடிகிறது. அனைத்தையும் இணைத்து, திரு.க.கதிரேசன் அவர்கள்,



இச்சிவன் கோயில் திருக்குடமுழுக்கு நன்னாளில் - *18-03-2016* வெள்ளிக்கிழமையன்று வெளியிடுவது சிறப்பு மிக்க தொண்டாகும். இந்நூலைப் பதிப்பித்து வெளியிடும் குன்றக்குடி ஆதீனப்புலவர் க.கதிரேசன் அவர்களின் திருத்தொண்டு மேலும் சிறக்க அருள்தரு குங்குமசுந்தரி அம்மை உடனாய திருமூல நாதப் பெருமான் திருவடிகளை இறைஞ்சுகிறேன்.



**இத்திருக்கோயிலின் முன்னைத் திருக்குட நன்னீராட்டு விழாக்கள்**

| | |
|---|---|
| 1938 | சிவத்தொண்டர் **அ.நமச்சிவாயம் செட்டியார்** அறங்காவலர் |
| 26-06-1961 | சிவத்திரு. **மு. சுப்பிரமணியன் செட்டியார்** நிர்வாக டிரஸ்டி2 |
| 11-09-2000 | சிவத்திரு. **சி.இராமச்சந்திரன்,** அறங்காவலர் சிவத்திரு.சி.கனகசபை, திருப்பணிக்குழுத் தலைவர் |
| 18-03-2016 | திரு.**சோ.மனோகரன்,** எம்.ஏ., பி.எல்., செயல் அலுவலர் மற்றும் தக்கார் |

# அணிந்துரை

உலக. **புவியரசு**
செயலாளர்
திருத்தவத்துறைத் தமிழ்ச்சங்கம்

பூவாளூர் அருள்தரு திருமூலநாதர் பதிகம்.

அருள்தரு குங்குமாம்பிகை பதிகங்கள்

நூல் வடிவாக அச்சு வாகனம் ஏற்கின்றன.

இறைநிறை சிந்தையர் முப்போதும் திருமேனி தீண்டும் பேறு பெற்றவர் சிவத்திரு. வெங்கடேச குருக்கள். விரைசெறி நறுமலர்களாகப் பதிகங்களைச் சூட்டி மகிழ்கிறார்.

நடஞ்செய்நாதனை நாளும் பூசித்த அடஞ்சூர் துரைசாமியார் ஒளிர்மணி ஆரமாக அணிவித்து மகிழ்கிறார்.

விரைசெறி நறுமலர்களாகவும் ஒளிதிகழ் நன்மணிகளாக வும் திகழும் பதிகங்களுக்கு நிறை உரை எழுதிப் பெறும்பயன் தரும் கதிரேசனார் அருள்தரு குங்குமாம்பிகை பதிகத்தையும் அருள்பழுத்த தீங்கனியாகப் பாங்குறத் தருகிறார்.

பதிகங்களை நாம் முழுமையாக உணர்ந்து விழுமிய பயன்பெற மதிநிறை கதிரேசனார் உரையே பெரிதும் உறுதுணை புரிகிறது.

அவர் உரை இலையேல் அவற்றுள் பொதிந்துள்ள பொருண்மையும் பொலிவும் பொருள்களையும் நம்மால் பெற இயலாது போகும்.

பாட்டும் பொருளும் பருந்தும் நிழலும் போல என்பர். பாட்டினின்று உரை பிறழாது செல்வத்தைக் காட்டுவதே அஃது. நிழல் நிஜமல்ல. கதிரேசனாரே நிஜத்தை நிழலிலும் மிளிரச் செய்கிறார். இவர் உரை வரைந்து நூலாக்கியப் பாங்கு சாலச் சிறந்ததாக அமைந்துள்ளது.



தோரண வாயில், பதிகப் பாடல், குறிப்புரை, பொழிப்புரை, விளக்கம் - இவற்றுடன் இலக்கணக் குறிப்பும் இடம்பெறுகிறது.

தோரண வாயில் வழியாக நம்மை அழைத்துச் செல்கிறார். செல்லும்போதே நூலை முழுமையாக இப்பதிகங்கள் நுகரும் தகுதியை பெறவைத்து அறிய புரிய தெளிய திகைக்க நம்மைத் தயார் செய்கிறார்.

பதிகப்பாடல்களை தேவையான இடங்களில் சிதைவு நேராமல் சந்திப் பிரித்து செறிவூட்டம் செய்கிறார். பொருள் அறிய விரும்பும் நமக்குக் குறிப்புரை தந்து நம்மை ஊக்குவிக் கிறார். பொருளாக்கம் நமக்குப் புரிகிறது. பொழிப்புரை பாடலின் பிழிவைச் சுவைக்க வைக்கிறது. விளக்கவுரை மேலும் அறிந்து திகைக்கச் செய்கிறது.

அவர் உரைவண்ணம் உரைவண்ணமே!

திருத்தவத்துறையில் இறையருள் பெற்ற ஏழு முனிவர் களின் எழுபது புதல்வர்கள் பூவாளூரில் தவம் இயற்றிப் பேறு பெற்றனர். பழமலை இளவணிகன் சந்திரசூடனுக்கும், பூவாளூர் வணிகன் மஞ்சுளன் - காந்திமதி இணையரின் மகள் சந்திரமதிக்கும் திருமணத்தைத் திருமூலநாதர் சித்தராக வந்து நடத்தி வைத்தார் என்பன போன்ற பூவாளூர்ப் புராண செய்திகளையும் நாம் அறியமுடிகிறது.

மூவரும்அறியா முத்தி முதல்வி எனுமிடத்து,

இங்கு கூறப்பெறும் உருத்திரன் என்பவன், மகாஉருத்திரன் ஆகிய பரமசிவனின் வேறானவன்; இவ்வுருத்திரன், நான்முகன் முதலியவர்களுடன் வைத்து எண்ணப்பெறும் குணி உருத்திரன் ஆவான். இவன் உள்ளிட்ட மூவரும் முத்திப்பேறு பற்றி அறியா மைக்குக் காரணம் இவர்களிடம் உள்ள அதிகாரமே என்பது மரபு என்றும்,

நாயிற்கடையேன் எனுமிடத்து,

பகுத்தறிவு இன்மையால் குறிக்கோளின்றி அலைதல், சின்னஞ்சிறு துண்டு இறைச்சியிடும் கள்வர்க்கும் துணையாதல் முதலியன நாய்க்குணம். பகுத்தறிவு இருந்தும், உயர்

குறிக்கோளின்மை, சிறுதெய்வ வழிபாடு முதலியன கொண்டவன் மனிதன். எனவே இவன் நாயினும் கடைப்பட்டவன் என்றார் எனவும் விளக்கங்கள் தருகிறார்.

குங்குமசுந்தரி குமரி தாயே - எனுமிடத்து,

உயிர் எல்லாம் ஈன்றும் பவன் பிரம்மச்சாரியாகும் பால்மொழி கன்னி ஆகும் என்ற சித்தியாரைக் காட்டி விளக்கம் தருகிறார்.

உரைவிளக்கத்தில் இவர் காட்டும் மேற்கோள்கள் பதிகப் பாடல்களை விளக்கம்பெறச் செய்வதுடன் அவ்வருள் நூல்கள் பலவற்றை அறியவும், பயிலவும் தூண்டுகின்றன.

சிகரமாக இவர் தம் உரையில் சித்தாந்த சாத்திரங்களின் செறிந்த கருத்துக்களைப் பிழிந்து தருகிறார்.

பதிகங்கள் அருள்பழுத்த தீங்கனிகள் என்றால் இவர் உரை விழுமிய சுவையை முழுமையாகத் தரும் அவற்றின் பிழிவு எனலாம்.

உரையாசிரியர் கதிரேசனாரின் நூல்களை மட்டும் பயின்றாலே சைவ சமயம் சார்ந்த இலக்கியம், புராணம், தத்துவங்கள் அனைத்தையும் அறிந்து அரும் புலவனாகப் பெருமை பெறலாம்.

திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரனார் வழி, பூவாளூர் தியாகராசச் செட்டியார் அவர் வழி, குன்றக்குடி ஆதீனப் புலவர், தமிழாகரர், சைவத்தமிழ்மணி, சைவத்தமிழ் அறிஞர், சித்தாந்த செல்வர், பூவாளூர் வித்துவான் க. கதிரேசனார் ஆவார். மகாவித்துவான் வழிவந்து இன்று நம்முடன் வாழும் கதிரேசனார் மேலும் பல நூல்களைத் தந்து பெருமை பெற ஓங்கிச் சிறந்து வாழ இறை அருள் புரியுமாக!





உ

பூவாளூர்

அருள்தரு குங்குமசுந்தரி அம்மன் உடனாய திருமூலநாதர் திருக்கோயில்

நூல்

அருள்தரு திருமூலநாதர் பதிகம்

**காப்பு - 1 - தல விநாயகர்**

**அருள்தரு வெள்ளை வாரண விநாயகர்**

முத்திக்கு வித்தாய் முளைத்த முழுமுதலாய்த்
தித்திக்கும் ஆனந்தத் தெள்ளமுதே-சத்திசிவன்
உள்ளத்தின் உள்ளே உகந்துமக வாய்க்கொண்ட
வெள்ளைவா ரணத்தேவே காப்பு

**குறிப்புரை :** உகந்து = மிக்க மகிழ்வுடன். வித்து = சாதனம்.

**பொழிப்புரை :** முத்திக்கு உரிய சாதனமாகத் தோன்றிய முழுமுதற் பொருளாகவும், அனைவர்க்கும் இனிக்கும் பேரின்பம் தரும் அமுதமாகவும் உள்ளவனே! அண்டங்களுக்கு எல்லாம் அம்மையப்பன் ஆகிய சத்தியும் சிவமும் ஆகியவர் தமது உள்ளத்தில் மகிழ்வுடன் மகவாக ஏற்ற அருள்தரு வெள்ளை வாரண விநாயகத் தெய்வமே! நீயே எமக்கும் எமது நூலுக்கும் என்றும் காப்பு ஆவாய்.

**காப்பு - 2 - தலத்து ஆறுமுகப் பெருமான்**

திருவருள் சுரக்கும் சென்னி ஓராறும் ஒளிரும் செவ்வேள்
வருபவம் அடியார்க் (கு) என்றும் வகுத்திடா (து) அருளிச் செய்வான்
இருபுறம் தேவ சேனை வள்ளியும் இலங்கிக் காணத்
திருவளர் பூவா ளூரில் திகழ்ந்திடும் கந்தவேளே.

**குறிப்புரை :** சென்னி = திருமுகம். வருபிறப்பு = இனிவரும் பிறப்பு. வகுத்திடாது = தராது.

**பொழிப்புரை :** தமது இருபுறங்களிலும் அருள்தரு தெய்வயானை அம்மையார் அருள்தரு வள்ளி நாச்சியார் இருவரும் விளங்க, தெய்வத் தன்மை வளரும் பூவாளூரில்

திகழும் அருள்தரு ஆறுமுகப் பரம்பொருள், திருவருள் இடையறாது சுரக்கின்ற தமது ஆறு திருமுகங்களுடன் ஒளிர்வதால் தன்னை வணங்கும் அடியார்களுக்கு இனி வரும் பிறப்பு ஏதுமின்றித் தனது திருவடி நிழல் தந்து அருள்பாலிப்பான்.

**இலக்கணக் குறிப்பு :** சென்னி - முதலாகு பெயர்

**நூல்**

**திருமூலநாதர் பதிகம்**

1. **கங்கையும் அரவும் திங்கள் கடிகமழ் வன்னி கொன்றை**
   **தங்கிடும் சடையும் தோன்றத் தூயவெண் ணீறு பூசி**
   **குங்குமசுந் தரியை வாமம் துலங்கிடக் கோலம் பூண்டு**
   **தம்கழல் அடியார்க்(கு) ஈயும் திருமூல நாத போற்றி**

**குறிப்புரை :** கடி = நறுமணம். வன்னி = வன்னி மரத்தின் பச்சிலை. வாமம் = இடது பாகம்.

**பொழிப்புரை :** கங்கை, படஅரவு, மூன்றாம் பிறை, நறுமணம் கமழும் வன்னிப் பச்சிலை முதலியன தங்கிய தனது சடைமுடி தோன்றத் தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியின் இடதுபாகம் துலக்கமுற அருள்தரு குங்குமசுந்தரியை அழகுறத் தாங்கித் தன் அடியார்களுக்குத் தமது திருவடிப் பேற்றினை அருளும் அருள்தரு திருமூலநாதரே! உம்மை வணங்குகின்றேன்.

**இலக்கணக் குறிப்பு :** கடி - பலகுணம் தழுவிய உரிச்சொல்.

2. **கூவிள வனத்தில் தோன்றிக் குங்குமசுந் தரியா ளோடு**
   **மேவிய இருக்கை கண்டு மெல்லியபூங் குழலாள் இரதி**
   **தேவியும் வேண்டி நிற்கத் திறமுடன் பதியை ஈந்தாய்**
   **தூவினன் மலரால் போற்றிப் போந்தனர் அமரர் அன்றே.**

**குறிப்புரை :** கூவிளம் =வில்வம். அன்றே = அப்போதே.

**பொழிப்புரை :** இன்று பூவாளூராக உள்ள அன்றைய வில்வக்காட்டில், அன்றே நீ, அருள்தரு குங்குமசுந்தரியுடன்



எழுந்தருளி இருப்பதைப்பார்த்து, மென்மையான அழகிய கூந்தலுடைய இரதிதேவி வந்து உன்னை வணங்கித் தன் கணவனை உயிர்ப்பித்துத் தருமாறு வேண்ட, அவளது வேண்டுகோளுக்கு இரங்கி அப்போதே அவள் கணவனான மன்மதனை உயிர்ப்பித்து அவளுக்குத் தந்தாய். உடன்வந்த தேவர்களும் உன்னை மலர்தூவிப் போற்றினர்.

**விளக்கம் :** இன்று பூவாளூர்ச் சிவன்கோயில் இருக்குமிடம் முன்னாளில் வில்வக்காடாக இருந்தது. அக்காட்டிடை இருந்த வில்வமர நிழலில் பெருமான் எழுந்தருளியிருந்தான். அதன் நினைவாக இன்று வில்வமரம் ஒன்று திருக்கோயில் திருச்சுற்றில் உள்ள அருள்தரு மகாலிங்கர் திருமுன் உள்ளது. சிவபிரானது நெற்றிக்கண் நோக்கால் எரியுண்ட மன்மதனை, இப்பெருமான் எழுப்பித்தந்தார் என்பது, ஆசிரியர் கச்சியப்ப முனிவர் அருளிய தலபுராணச்செய்தி.

**இலக்கணக் குறிப்பு :** இரதிதேவியும் - எச்சவும்மை.

3. **மாலொடு மற்றும் தேவர் மந்தரம் மத்தாய்க் கொண்டு**
   **வேலையைக் கடைய விண்ணோர் விடமது தோன்ற அஞ்சிச்**
   **சீலமாம் நின்தாள் போற்ற நஞ்(சு)அமு(து) ஆக்கிக் கொண்ட**
   **கோலமே காணப் பெற்றார் குறைஏதும் அடையார் அன்றே.**

**குறிப்புரை :** மந்தரம் = மந்தரமலை. வேலை = பாற்கடல். சீலம் = அறம்.

**பொழிப்புரை :** திருமாலுடன் பிற தேவர்களும் சேர்ந்து மந்தரமலையை மத்தாகக்கொண்டு பாற்கடலைக் கடைந்த போது நஞ்சு தோன்ற, அதனால் அனைவரும் அஞ்சி அற வடிவான உன்திருவடியைப் போற்ற, அந்நஞ்சினை அமுதமாக உண்டருளிய உன் திருக்கோலத்தினைக் கண்டு வணங்கும் பேறுபெற்றவர் எவ்வகைக் குறையுமின்றி நிறைநல நல்வாழ்வு பெறுவர்.

**விளக்கம் :** பெருமான் திருவடி அறவடிவானது:

அறவாழி அந்தணன் தாள் திருக்குறள். 8

**பெருமான் நஞ்சுண்டதும் தலைவர் கடமையும்:**

பெருமான், நஞ்சுண்டு காத்தான்; அண்டங்களுக் கெல்லாம் அவனே பெருந்தலைவனாதலின். சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன் - சிவஞானபோதம்; தன்னை அடைந்தார் வினைதீர்ப்பதன்றோ தலையாயவர் தம் கடனாவது -திருமுறை .4. ;

சங்கரன் சார்ந்தவர்க்கல்லால் நலமிலன் - அப்பரடிகள் நமச்சிவாயத் திருப்பதிகம்.6.

நண்ணினார்க்கு நல்லன் - திருவருட்பயன்.9. முதலியன நினைக.

4. தடவரை வில்லாய்க் கொண்டு பூஅரும் தேர தாகத்
திடமுறும் நகையால் அந்நாள் திரிபுரம் எரித்த காலை
இடபமாய்த் திருமால் தாங்க இன்னருள் புரிந்து நின்றான்
படம்கொள் பாம்(பு) ஆர்த்த பூவா ளூர்உறை புனிதன் தானே

**குறிப்புரை :** தடவரை = பெருமை பொருந்திய மாமேரு மலை. பூ = இந்நிலவுலகு. அரும்தேர் = சிறந்ததேர். திடம்உறும் நகை = ஆற்றல் மிக்க புன்முறுவல். திரிபுரம் = மூன்று அசுரர்களின் மூன்று கோட்டைகள். காலை = பொழுது. படம்கொள் பாம்பு = நல்ல பாம்பு.

**பொழிப்புரை :** பெருமை பொருந்திய மாமேரு மலையை வில்லாக ஏந்தி, இந்நிலவுலகைத் தேராகக் கொண்டு சென்று ஆற்றல் மிக்க தன் புன்முறுவலால் மூவசுரர்களின் மூன்று கோட்டைகளையும் எரித்தபோது, திருமால் இடபமாக வந்து தாங்கியதால் அத்திருமாலுக்கும் அருள்புரிந்தவன்; நல்ல பாம்பினை அணிகலனாக அணிந்தவனாய்ப் பூவாளூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு திருமூலநாதப் பெருமான் ஆவான்.

**விளக்கம் :** பொன், வெள்ளி, இரும்பு ஆகியவற்றாலான மூன்று கோட்டைகளை உடைய கமலாட்சன், வித்யுன் மாலி, வாணாசுரன் என்ற மூவசுரர்களும் அனைவர்க்கும் தீங்கு செய்ததால், சிவபிரான் அவர்களை வென்று



அவர்களது கோட்டைகள் மூன்றையும் எரித்து அழித்தான் என்பது தத்துவக் குறியீடாக அமைந்தது. இதனை, முப்புரம் என்பது மும்மல காரியம் என்பது திருமந்திரம்.

முப்புரஎரி நம் உதவியால்தான் நிகழ உள்ளது என்று செருக்குற்ற வில், தேர் முதலியவற்றை முற்றாக ஒதுக்கித் தன் புன்முறுவலால் எரித்தபோது திருமால் அறத்தின் குறியீடான இடபமாகித் தாங்கினானாதலின் கடையூழியில் திருமாலின் முழு என்புக் கூட்டையும் சிவன்தான் அணிந்தான் என்பதை,

தடமதில்கள் அவைமூன்றும் தழல்எரித்த அந்நாளில்
இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ
- திருவாச.திருச்சாழல்.15

கருங்கடல் வண்ணன் வெள்விடை ஆகி
அடிகள் தாங்கிய உதவிக்கு ஆங்கவன்
முழுஎன்பு சுமந்த கழுமுள் படையோய்
- திருவாரூர் நான்மணி.29

உயிர்கள் என்றென்றும் அழிற்றவை - அநாதிநித்தியம் - என்பதால் கமலாட்சனை, கரிகாட்டு வெண்ணீற்று அரங்கில் தான் ஆடும் பண்டரங்கக் கூத்துக்கு மணிமுழா கொட் டவும், மற்ற இருவரையும் தன் திருக்கோயில் வாயிற் காவலராகவும் பெருமான் அமைத்துக்கொண்டதை,

மூவெயில் செற்றஞான்று உய்ந்த மூவரில்
இருவர் நின்திருக் கோயிலின் வாய்தல்
காவ லாளர்என்று ஏவிய பின்னை
ஒருவன் நீகரி காடரங் காக
மானை நோக்கிஓர் மாநடம் மகிழ
மணிமு ழாமுழக் கஅருள் செய்த
தேவ தேவநின் திருவடி அடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூர் உளானே
- சுந்தரர். திருப்புன்கூர்.8

என்பதால் அறிகிறோம்.

**இலக்கணக் குறிப்பு :** தடவரை - உரிச்சொற்றொடர். படம் கொள்பாம்பு - படம் - இனம் விலக்கிய அடைமொழி.

5. **மாதவம் இயற்ற மன்னன் மலைமகள் ஆகி முன்னம்**
**மேதகு நீற்றார் அன்றி மெய்யது தீண்டேன் என்ன**
**ஏதமில் ஏறது ஏறி ஏந்திழைக்(கு) அருளும் மிக்க**
**தா(து)அவிழ் கொன்றை சூடும் திருமூல நாத போற்றி.**

**குறிப்புரை :** மன்னன் = இமயமலை அரசன் - இமவான். மலைமகள் = பார்வதிதேவி. நீற்றார் = வெண்ணீறு தரித்த சிவபிரான். மெய்யது தீண்டேன் = மணக்கமாட்டேன். ஏதம் = குற்றம். விடை =இடபம். தாது = மகரந்தம்.

**பொழிப்புரை :** முன்நாளில் பெருந்தவம் செய்த இமவானின் நோக்கத்தை நிறைவேற்ற, அவனுக்கு மகளாய்த் தோன்றி, மேன்மை பொருந்திய வெண்ணீறு தரித்த சிவபிரானை யன்றிப் பிறரை மண்க்கமாட்டேன் என்ற பார்வதிதேவியின் பொருட்டு, குற்றமற்ற அறவடிவான விடையேறிவந்து அவளை மணந்தவனாகிய மகரந்தம் சொரியும் கொன்றை மாலை சூடிய அருள்தரு திருமூலநாதப்பெருமானே உன்னை வணங்குகிறேன்.

**விளக்கம் :** விடை அறத்தின் குறியீடு:

அறன் உருவாகிய ஆனேறு

திருஒற்றியூர் ஒருபா ஒருபஃது. *6:3*

6. **சங்கவெண் குழையும் தோடும் சார்ந்தவெண் ணீறும் சார்ந்தும்**
**பொங்குவெம் புலியின் தோலும் பொருந்துபட் டாடை மின்ன**
**குங்குமசுந் தரியாள் பாகம் கொண்டநற் கோலம் கண்டார்**
**மங்கிடும் பிறவி சாரார் மாநிலம் மீண்டு வந்தே.**

**குறிப்புரை :** குழை = (ஆண்களின்) காதணி. தோடு (மகளிரின்) காதணி. சாந்து = கலவைச் சந்தனம். வெம்புலி = சினம்மிக்கபுலி. மங்கிடும் = இறப்புக்குரிய.

**பொழிப்புரை :** சிவபெருமான், தமது வலதுபக்கம் இடது பக்கம் ஆகியவற்றில் முறையே; வெள்ளிய சங்கினாலான



காதணியும், தோடும்; வெண்ணீறும், கலவைச் சந்தனமும்; சினம் மிக்க புலியின் தோலும், பொருத்தமான பட்டா டையும் ஒளிர, அருள்தரு குங்குமசுந்தரி அம்மையைத் தன் இடப்பாகம் கொண்ட அம்மையப்பர் திருக்கோலத்தைக் கண்டவர். இவ்வுலகில் மீண்டும் வந்து இறக்கும் பிறவி யுடையார்; வீடு பேறு பெறுவர்.

**விளக்கம் :** பெருமான் ஐந்தொழில் புரிய மேற்கொள்ளும் அம்மையப்பர் திருக்கோலமே தொன்மைத் திருக்கோலம். இதனை :

தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால் வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும் உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்து ஊதாய் கோத்தும்பீ

– திருவாச. திருக்கோத். *18.*

இதில் வரும் தோல், குழை, நீறு, சூலம் என்பன அம்மை யப்பர் திருமேனியில் அப்பனது வலப்பாகத்தன; துகில், தோடு, சாந்து, கிளி, வளை என்பன அம்மையின் இடதுபாகத்தன.

இத்திருக்கோலப் பாதாதிகேச வருணனையைப் பட்டினத் தடிகளின் திருவிடைமருதூர் மும்மணிக்கோவை முதற் செய்யுளின் 74 அடிகளில் கண்டு மகிழலாம். இத்திருக் கோலமே உலகினைப் படைக்க இறைவன் மேற்கொண்ட தொன்மைக் கோலம் என்பதை இதன் 69ஆவது அடியில் குறிப்பதையும் காணலாம். கண்டு மகிழ்க.

7. **வேதன்இந் திரனும் அங்கி வேந்தனும் சந்ர சூடன்**
**மாதொடு மன்ம தன்தான் மஞ்சுளன் முதலா னோர்கள்**
**தீதுறா வண்ணம் நின்தாள் சீரொடும் இறைஞ்சி ஏத்த**
**மாதொடு தோன்றிக் காத்தாய் மன்மத புரத்து ளானே.**

**குறிப்புரை :** வேதன் = நான்முகன். அங்கிவேந்தன் = தீக்கடவுள். சந்திரசூடன் = விருத்தாசலம் என்று வழங்கும் பழமலையில் சிறந்து விளங்கிய இளம்வணிகன். மஞ்சுளன் =

காந்திமதியின் கணவன், பூவாளூரினன். இவ்விருவர்க்கு மகள் சந்திரமதி.சந்திரசூடன் சந்திரமதி திருமணத்தைப் பூவாளூர் அருள்தரு குங்குமசுந்தரியம்மை உடனாய திருமூலநாதப் பெருமான் ஒரு சித்தராக வந்து நடத்தித்தந்தார் என்பது பூவாளூர்ப்புராணச் செய்தி. பூவாளூர்ப் பெயர்களில்ஒன்று மன்மதபுரம் என்பது.

**பொழிப்புரை :** பூவாளூர்ப் பெருமானே! வேதம் ஓதும் நான்முகன், இந்திரன், தீக்கடவுள், சந்திரசூடன், இரதி, மன்மதன், மஞ்சுளன் முதலியோர் போற்றி வணங்க, அவர்கள் தீமை ஏதும் அடையாது நன்மையுற அம்மையோடு அப்பனாகத் தோன்றிக் காத்தருளினாய். என்னையும் காத்தருள்க.

**விளக்கம் :** பூவாளூர்ப் பெருமான் திருமணம் நடத்திவைத்து வாழ்விக்கும் அருளாள்ன் ஆவான் .

8. **மந்திர மதிப டைத்த முனிவரர் எழுபதின்மர்**
**வந்துதம் கேதம் தீர வேண்டினர் மகத்தால் அன்று**
**சிந்துர மேனி யாளும் திகழமுன் தோன்றி நின்று**
**பந்தமில் போதம் ஈந்தான் பூவைநன் நகரு ளானே.**

**குறிப்புரை :** மந்திரமதி = மந்திரங்களைச் சிறப்பாக ஓதும் அறிவு. கேதம் = துன்பம். மகம் = வேள்வி. பந்தம் = மும்மலங்கள். போதம் = ஞானம். பூவை = பூவாளூர்.

**பொழிப்புரை :** மந்திரங்களைச் சிறப்பாக ஓதும் அறிவுஉடைய முனிவர்கள் எழுபதுபேர் உன்திருமுன் வந்து தமது துன்பம் தீரும் பொருட்டு வேள்வி இயற்றி உன்னை வணங்கி வேண்ட, பூவாளூர்ப் பெருமானாகிய நீ சிவந்த திருமேனியளாகிய அருள்தரு குங்குமசுந்தரி அம்மையுடன் அவர்கள் முன் தோன்றி மலம் இல்லாத ஞானத்தை உபதேசித்து அவர்களின் துன்பம் தீர்த்தாய். எனக்கும் அவ்வகை ஞானம் அருள்க.

**விளக்கம் :** திருத்தவத்துறையில் (இலால்குடி) எழுந்தருளியுள்ள அருள்தரு எழுமுனிவர்க்கு இறையை (சப்தரிசீசுவரரை) வழிபட்டுவந்த ஏழுமுனிவர்கள் தம் மக்கள் எழுபது பேர்களின்



மும்மலத்துன்பம் தீரும்பொருட்டு நீவிர் பூவாளூர் சென்று உமது துன்பம்தீர, அருள்தரு திருமூலநாதர் திருமுன் சைவ சாத்திர வேள்வி தனித்தனியே செய்தால் பெருமான் தோன்றி அருள்புரிவான் என்று கூற அதன்படி அவர்கள் பூவாளூர்ப் பெருமான் திருமுன் வேள்வி இயற்ற, அவன் ஞானம் உபதேசித்தான் என்பது பூவாளூர்ப் புராணச் செய்தி.

**அம்மைசெந்நிறத்தள் : செம்பவளத் திருமேனிச் சிறுமி**
**- திருமந்திரம்**

**இலக்கணக் குறிப்பு :** மேனியாளும் - எச்சவும்மை. பூவை - பூவாளூர் என்பதன் மரூஉ மொழி.

9. **சென்னியை நின்தி ருத்தாள் சேர்த்திட வேண்டும் அன்றி**
**மன்னுநின் நாமம் என்றும் மனத்திடை இருத்தல் செய்வாய்**
**முன்னிய அடியார்க்(கு) என்றும் முழுமுதல் ஆகி நின்றாய்**
**உன்னிய(து) அடியேற்(கு) ஈயும் உடையாய்நின் திருத்தாள்**
**போற்றி.**

**குறிப்புரை :** முன்னிய=நினைத்த. முழுமுதல்=படைத்தல் முதலிய ஐந்தொழில்களையும் தான் ஒருவனே செய்யும் முழுமையான தலைமைப் பொருள் - சிவபெருமான். உன்னியது = நினைத்தது. மன்னு = நிலைத்த.

**பொழிப்புரை :** நான் நினைத்ததை நினைத்தவாறே எனக்கு அருளுவதுடன், என்னை அடிமையாகவும் உடையவனே! என் தலையினை உன்திருவடிகளில் சேர்த்துஉன்னை வணங்குவது மட்டுமன்றி,உன்திருப்பெயர் என்மனத்தில் நிலைத்திருக்கவும் அருள்க.உன் திருவடிகட்கு அடியேனது வணக்கம்.

**விளக்கம் :** அவன் திருவடி ஞானத்தின் குறியீடு. நம்தலை, அறிவின் குறியீடு. (எ.டு தலைதடுமாற்றம்). எனவே சென்னியை நின் திருத்தாள் சேர்த்தல் என்பது அறிவை ஞானத்தின் பால தாக்கல் ஆகும்.

**அவன் திருநாமத்தை (சிவாயநம) நினைக்கும் முறையும் பயனும் :**

எளிய வாதுசெய் வார்எங்கள் ஈசனை
ஒளியை உன்னி உருகு மனத்தராய்த்
தெளிய ஓதிச் சிவாய நமஎன்னும்
குளிகை யிட்டுப்பொன் ஆக்குவன் கூட்டையே

- திருமந்திரம். 2709.

**இலக்கணக் குறிப்பு :** சென்னி - இடவாகுபெயர்.

10. **புந்தியில் கல்வி சேரும் புகழ்பெறும் செல்வம் ஓங்கும்**
**பந்தியா வினைகள் யாவும் பரம்அதில் முத்தி நல்கும்**
**நந்(து)உறழ் மிடற்றி னாளாம் நாயகி உடனாய் நின்ற**
**நம்திரு மூலநாதர் திருவடி நயந்தோர்க் கன்றே.**

**குறிப்புரை :** நந்து = சங்கு. வினைகள் யாவும் பந்தியா. பந்தியா = பிறவிக்குட்படுத்தா. புந்தி = அறிவு. கல்வி = ஞானம். பரம் = மேலிடம்.

**பொழிப்புரை :** சங்கினை ஒத்த திருக்கழுத்துடைய அம்மையுடனாய் நிலைத்த அருள்தரு திருமூலநாதர் திருவடிகளை விரும்பி நிற்கின்றவர் அறிவில், ஞானம் வந்து சேரும், புகழ் உண்டாகும், செல்வம் மிகும், வினைகள் அவரைப் பிறவியில் தள்ளிக் கட்டுப்படுத்தா, அனைத்திற்கும் மேலிடத்ததான முத்திஇன்பத்தில் சேர்க்கும்.

**விளக்கம் :** முத்தி இன்பம் : இருவினைமும் மலமுமற இறவியொடு பிறவியற நீயுநானுமாய் ஏக போகமாய் இறுகும் வகை பரமசுகம்

- திருப்புகழ். அறுகுநுனி பனி.

**இலக்கணக் குறிப்பு :** நந்து உறழ் - உறழ் - உவமஉருபு .

11. **நாயினும் கடையேன் உன்னை நயம்படச் சொல்லாக் குற்றம்**
**தாயினும் தயவு நல்கும் தீனனே பொறுப்பாய் என்றும்**
**மாயனும் மலரோன் தானும் மருவியே காணாப் பாதம்**
**சேயினேற்(கு) அருளிச் செய்வீர் திருமூல நாதத் தேவே.**

**குறிப்புரை :** தீனன் = எளிதில் அருள்பவன். மருவுதல் = பயிலுதல்.



**பொழிப்புரை :** அருள்தரு திருமூலநாதராகிய தெய்வமே! நாயை விடவும் கீழ்ப்பட்டவனாக உன்னை நன்மை உண்டாகுமாறு போற்றாத என்குற்றத்தைப் பொறுத்தருள்வாய். தாயினும் சாலப் பரிந்து கருணையை எளிதில் அருள்பவனே! உன் அருளில் பயின்றும்கூட, திருமாலும் நான்முகனும் காணாத உன் திருவடியை, உன்குழந்தையாகிய எனக்கு அருள்க.

**விளக்கம் :** நாயிற்கடையேன் :

நாயிற் கடைப்பட்ட நம்மை - திருவாசம். 202.

பகுத்தறிவு இன்மையால் குறிக்கோளின்றி அலைதல், சின்னஞ்சிறு துண்டு இறைச்சியிடும் கள்வர்க்கும் துணையாதல் முதலியன நாய்குணம். பகுத்தறிவு இருந்தும், உயர் குறிக்கோளின்மை சிறுதெய்வ வழிபாடு முதலியன கொண்டவன் மனிதன். எனவே இவன் நாயினும் கடைப்பட்டவன் என்றார்.

மாயனும் மலரோன்தானும் மருவியே காணாப்பாதம்:
அருளில் கிடந்தும் அருள்துய்க்காமை:
வெள்ளத்துள் நாவற்றியாங்கு உன் அருள் பெற்றுத்
துன்பத்தினின்றும் விள்ளக் கிலேனை

- திருவாசகம். 118.

**இலக்கணக் குறிப்பு :** நாயினும் - இழிவுசிறப்பும்மை. தாயினும் - உயர்வுசிறப்பும்மை.



## அருள்தரு குங்குமசுந்தரியம்மை பதிகம்
### ஆசிரியர்
### பூவாளூர் சிவத்திரு.ஆர்.வெங்கடேசக் குருக்கள்

1. செங்கதிர் உட்கும் மேனி திகழ்கர கமலம் தன்னில்
பங்கயம் தரித்துப் பாங்காய்ப் பன்மணி மாலை பூண்டு
திங்கள்செஞ் சடையில் தோன்றும் திருமூல நாதர் பங்கில்
கங்குலும் பகலும் தங்கும் குங்குமசுந் தரியே போற்றி

**குறிப்புரை** : செங்கதிர் = செஞ்ஞாயிறு. உட்கும் = வெட்கப்படும். கங்குல் = இரவு.

**பொழிப்புரை :** செஞ்ஞாயிறும் வெட்கப்படும்படியாகச் சிவந்த திருமேனியில் விளங்கும் தமது கைத்தாமரையில் ஒரு தாமரை மலர் தாங்கி, பலவகை மணிகள் பதிக்கப் பெற்ற மாலை அணிந்து, தமது செஞ்சடையில் பிறைசூடிய அருள்தரு திருமூலநாதரின் இடப்பாகத்தில் இரவும் பகலும் எப்பொழுதும் தங்கி அருள்பாலிக்கும்அருள்தரு குங்கும சுந்தரித் தாயே வணக்கம்.

**விளக்கம் :** அம்மையின் திருமேனிநிறம் பசுமை, கருமை என்கிற மரபுடன், செம்மை என்னும் மரபும் உண்டு. இதனை;

ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்கவல்லி
மீ.பி.தமிழ்.அம்புலி.மகுடம்.
உதிக்கின்ற செங்கதிர் . . . . . . விழித்துணையே
-அபிராமிஅந்.1

இவ்வந்தாதிச் செய்யுளில் அம்மை செந்நிறத்தள் என்பதற்கு ஆறுஉவமை தருகிறார்.

**இலக்கணக் குறிப்பு :** கரகமலம் - உருவகம்.

2. செந்திரு மலர்ப்பா தத்தில் சிலம்(பு)ஒலி வேதம் ஆர்ப்ப
வந்துதன் அடியார்க்(கு) என்றும் வாழ்ந்திடும் செல்வம் நல்கி
புந்தியில் நிறைந்தோர் வாழும் பூவாளூர் உறையும் அன்னை
சுந்தரி அடிகள் போற்றித் திருவருள் பெறுவம் இன்னே.



**குறிப்புரை :** செந்திரு=அழகிய தெய்வத்தன்மை வாய்ந்த. சிலம்பு வேத ஒலி = சிலம்பாக அணிந்த நால்வேதஒலி. என்றும்வாழ்ந்திடும் செல்வம்=இறப்போ பிறப்போ இன்றி வாழும் வீடு பேறாகிய செல்வம். புந்தி=ஞானம்.

**பொழிப்புரை :** அழகிய தெய்வத்தன்மை வாய்ந்த தாமரை மலர் ஒத்த திருவடிகளில் சிலம்பாக அணிந்த நால்வேதம் முழங்க வந்து, உன் அடியார்களுக்கு இறப்போ பிறப்போ இல்லாத பேரின்ப மயமான வீடுபேறாகிய செல்வம் அருள,ஞானம் நிறைந்தவர்கள் வாழும் பூவாளூரில் எழுந்தருளியுள்ள தாயாகிய அருள்தரு குங்குமசுந்தரியின் ஒளி பொருந்திய திருவடிகளை இப்போதே போற்றி அருள்பெறுவோம்.

**விளக்கம் :** உலகியற் செல்வங்கள் ஆறிடும் மேடும் மடுவும் போன்றன; நிலையில்லாதன. வீடுபேறாகிய செல்வமே பேரா இயற்கையுடையது; மற்று ஈண்டு வாரா நிலையினதாதலின் அதனை என்றும் வாழ்ந்திடும் செல்வம் என்றார்.

3. மூவரும் அறியா முத்தி முதல்வியாய் முன்னம் தோன்றித்
தேவரும் முனியும் போற்றத் தண்ணிய அருள்பு ரிந்தே
ஏவரும் துதிக்க இன்ப இயல்பினள் ஆகி வெற்பின்
கோஅருள் மகளாய் வந்த குங்குமசுந் தரியே போற்றி.

**குறிப்புரை :** மூவர்=நான்முகன், திருமால், உருத்திரன். முத்தி முதல்வி = முத்திப் பேறு தரும் பொருட்டு முன் நிற்பவளாக. முன்னம்= அநாதி. வெற்பின்கோ=மலையரசன் - இமவான்.

**பொழிப்புரை :** நான்முகன் திருமால் உருத்திரன் ஆகிய மூவர் கூட அறியாத முத்திப் பேறுதரும்பொருட்டு முன்னிற்பவளாக, அநாதியே உள்ளவளாக,தேவர்கள் முனிவர்கள் போற்ற அனைவர்க்கும் தண்ணியஅருள் வழங்கி,அனைவரும் வணங்கக்கூடிய போன்ப வடிவினளாய், இமவானுக்கு மகளாக வந்த அருள்தரு குங்குமசுந்தரித்தாயே வணக்கம்.

**விளக்கம் :** இங்குக்கூறப்பெறும் உருத்திரன், மகா உருத்திரன் ஆகிய பரமசிவனின் வேறானவன்; இவ்வுருத்திரன், நான்முகன்

முதலியவர்களுடன் வைத்து எண்ணப்பெறும் குணி உருத்திரன் ஆவான். இவன் உள்ளிட்ட மூவரும் முத்திப்பேறு பற்றி அறியாமைக்குக் காரணம் இவர்களிடம் உள்ள அதிகார மலமே என்பது மரபு.

**இலக்கணக் குறிப்பு** : மூவரும், ஏவரும் - முற்றும்மைகள். அறியா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். தேவரும் முனியும் - எண்ணும்மைகள்.

**4. கடலிடைத் தோன்றும் ஆலம் களத்தினில் தரித்த எந்தை**
**இடமதாய் இருந்தே என்றும் இன்னருள் சுரக்கும் அன்னாய்**
**சுடர்கதிர் மதியின் உள்ளே சுந்தரி ஆகி நின்றாய்**
**கடவுள்கண் மணியே குங்கும சுந்தரி குமரி தாயே.**

**குறிப்புரை** : எந்தை = எம்தந்தை -சிவபிரான். ஆலம்=நஞ்சு. களம்=திருக்கழுத்து. கதிர்=ஞாயிறு. கடவுள் = எல்லா வற்றையும் கடந்தவர், அனைத்தையும் செலுத்துகிறவர். கண்மணி=உவப்பானவள்.

**பொழிப்புரை** : அநாதியே எல்லாவற்றையும் கடந்தும், கடவிக் கொண்டும் உள்ள சிவபிரானுக்கு உவப்பானவளே! அருள்தரு குங்குமசுந்தரியே! எப்போதும் குமரியே! தாயே! திருப் பாற்கடலில் தோன்றிய நஞ்சினைத் தன் திருக்கழுத்தில் அமைத்துக் கொண்ட எமது தந்தையின் இடப்பாகத்தில் அமைந்து எப்போதும் உயிர்களுக்கு இனிய அருள்சுரக்கும் தாயே! ஒளி பொருந்திய ஞாயிறு திங்கள் இரண்டின் உள்இருந்து உயிர்களுக்கு அருளும் அழகியாகவும் நீ விளங்குகின்றாய். உன்னை வணங்குகிறேன்.

**விளக்கம்** : ஆலம் களத்தினில் தரித்த எந்தை : -

கறைமிடறு அணியலும் அணிந்தன்று
-புறம். கடவுள் வாழ்த்து

நஞ்சமர் கண்டத்தன் - திருவா. 330

**கடவுள் கண்மணி** : பெருமான்தான், நாடு அனைத்தும் நங்கையினால் செய்து அளிக்கும் நாயகன், எவ்வழி நின்றான் ஈசன் அவ்வழிஅவளும் நிற்பள் - எனவே அவனுக்கு இவளைக் கண்மணி என்றார்.



**அம்மை குமரி** : முன்பு உலகீன்ற முகிழ்முலைக் கன்னி
- சிதம்பரச்செய். கோ. 31.

உலகு உயிர் எல்லாம் ஈன்றும் பவன் பிரமச்சாரியாகும்
பால்மொழி கன்னிஆகும். - சித்தி .சுபக். 167.

**இலக்கணக் குறிப்பு** : எந்தை - மரூமொழி.

**5. கலைமகள் கமலை கேள்வர் காப்புநற் படைப்பும் செய்ய**
**நிலைபெறும் தன்மை நின்றன் நீள்நெடும் கண்ணின் நோக்கால்**
**சிலையதாய் வரைவ ளைத்த திருமூல நாதர் தம்மைத்**
**தலைவராய்க் கொண்ட தாயே தண்ணருள் நல்கு வாயே.**

**குறிப்புரை** : கமலை=திருமகள். கேள்வர்=கணவர்கள். சிலை= வில். வரை=மாமேருமலை.

**பொழிப்புரை** : முப்புர எரியில் மாமேருமலையை வில்லாக வளைத்த அருள்தரு திருமூலநாதப் பெருமானைக் கொழுந னாகப் பெற்ற என்தாயே! கலைமகள் கணவன் ஆகிய நான்முகனும், செந்தாமரையில் இருக்கும் திருமகள் கணவனான திருமாலும் ஆகிய இருவரும் முறையே படைத்தல் காத்தல் தொழில்களில் நிலைபெற்றிருக்கும் அத்தகுதி அவர்களுக்கு வாய்த்தது, உனது காதளவு நீண்ட கடைக்கண் நோக்காலேயே ஆகும். எனக்கும் அருள்க.

**விளக்கம்** : நான்முகன், திருமால் ஆகியோர் படைத்தல் காத்தல் செய்யக்காரணம் :

பயந்திடும் சத்தி ஆதி பதிதலால் படைப்புமூலம் முயன்றனர் இவர். - சித்தி. 80.

**இலக்கணக் குறிப்பு** : நீள்நெடு-ஒருபொருள்பன்மொழி. இச்செய்யுள் எதிர்நிரல் நிறையணி.

**6. மண்புனல் தீயும் காற்றும் மாசிலா வானும் ஆகி**
**எண்ணரும் உயிர்கட் கெல்லாம் ஏகமாய் இருந்தும் ஆங்கே**
**தண்ணளி சுரந்த பாவாய் தாழ்ந்திடா(து) என்முன் மீனக்**
**கண்அருள் நோக்கம் கொள்ளே குறைகளைப் பொறுக்கும் தாயே.**

**குறிப்புரை** : ஏகம்+ஆய்=ஒற்றைத்தாயாக. நோக்கம் = பார்வை.

**பொழிப்புரை** : நிலம் நீர் தீ காற்று மாசற்ற வானம் என்பனவாக இருந்து,எண்ணத் தொலையா உயிர்கட்கெல்லாம் ஒரே தாயாக இருந்து, அனைத்துயிர்க்கும் அருள்சுரக்கும் பெண்ணே! குறைகளைப் பொறுக்கும் தாய் நீயாதலால் காலம் தாழ்த்தாது நீ என்முன் தோன்றிக் கெண்டைமீன் ஒத்த உன்கண்களின் அருட்பார்வை என்மீது செலுத்துக.

**விளக்கம்** : எண்ணரும் உயிர்கள் :

பிறந்தநாள் மேலும் பிறக்கும்நாள் போலும்
துறந்தோர் துறப்போர் தொகை .

- திருவருட்பயன்.11.

(உலகத்தோற்றம் முதல் இன்றுவரை தோன்றியனவும் இனி மேலும் தோன்ற இருப்பனவும் ஆகிய உயிர்களின் எண்ணிக்கை = இன்றுவரை வீடுபேறு பெற்றனவும் இனிமேல் வீடுபேறு பெற இருப்பனவும்ஆகிய உயிர்களின் எண்ணிக்கை யாகும். இரண்டும் எண்ணற்கரியனவாகும்.) ஏகம்ஆய் : ஒரேதாய் : உலகம் ஓர் ஏழும் பலமுறை பயந்தும் முதிரா இளமுலை முற்றிழை மடந்தை

- காசிக்கலம்பகம்.38.

**இலக்கணக் குறிப்பு** : மண் புனல்-உம்மைத் தொகைகள். தீயும்காற்றும்-எண்ணும்மைகள். பாவாய் - விளியுருபேற்ற உவமையாகு பெயர். மீனக்கண் - உவமைத்தொகை.

7. இக்குவில் பஞ்ச பாணம் இலங்குபா சாங்கு சம்கை
மிக்கமுத் தாரம் நெஞ்சில் மிளிரும்பொன் ஆடை பூண்டு
திக்கைஅம் பரமாய்க் கொண்ட் திருமூல நாதர் தாமும்
சொக்கவே மிகையாய்த் தோன்றும் செந்திரு போற்றும் தாயே .

**குறிப்புரை** : இக்கு=கரும்பு. பஞ்சபாணம்= தாமரை, மா, முல்லை, குவளை மலர்கள், அசோகத்தளிர் ஆகிய அம்புகள். பாசம்+அங்குசம்=பாசாங்குசம். அம்பரம்=ஆடை. சொக்க= வனப்புடன் விளங்க. மிகையாய்=மிகச்சிறந்தவளாய்.



செந்திரு=திருமகள்.திக்கை அம்பரமாய் . . . . . . சொக்கவே, இக்குவில் . . . . . பூண்டு, செந்திருபோற்றும்மிகையாய்த் தோன்றும் தாயே.

**பொழிப்புரை** : திசை ஆடை உடுத்த அருள்தரு திருமூலநாதப் பெருமான் வனப்புடன்விளங்குமாறு, நீ கரும்புவில், ஐவகை அம்புகள், கயிறு, அங்குசம் கையில்தாங்கிச் சிறந்த முத்து மாலை திருமார்பில் விளங்க, ஒளிரும் பொன்னாடை பூண்ட அழகுடையவளாய், மிகச் சிறந்தவளாய் விளங்கும் திருமகளும் போற்ற விளங்குபவளே வணக்கம்.

**விளக்கம்** : திகம்பரன் :

அரையில் ஆரும் ஆடை இல்லவன் - திருமு.2.திருமூக்கீச். 7

சிவபிரானின் புகழார் வனப்புக்குக் காரணம் :

சீராட்டு நினக்கிலை அச்சீராட்டும் சிறுமருங்குல்
பேராட்டி விளையாட்டுஉன் பெயர்த்தாகி நடந்ததே

- சிதம்பரச் செய்யுட். 68

**இலக்கணக் குறிப்பு** : இக்குவில் பஞ்ச . . . . பொன்னாடை - எண்ணும்மைத்தொகைகள்.

8. பன்னெடுங் காலம் மூண்ட பழவினை என்பால் நீங்க
நின்நெடுங் கண்ணின் நோக்கில் நிறைந்திடச் செய்ய வல்லாய்
தென்னவன் வந்(து)என் முன்னே திகைத்திடச் செய்யா முன்னம்
கன்னல்இன் மொழியே தேனே சுந்தரி காவாய் அம்மா.

**குறிப்புரை** : தென்னவன்=தென்திசைக்குரிய எமன். மூண்ட = திரண்ட. நெடுங்கண்=பெருமை மிக்க கண்கள். நிறைந்திட = நான் முழுமையுற.

**பொழிப்புரை** : வெல்லக் கட்டியாக மனம் இனிக்கப் பேசுகின்றவளே,தேனே, சுந்தரியே; தென்திசைக்குரிய எமன் வந்து என்னைத் திடுக்கிடச் செய்யுமுன், என்பிறவிகள் தோறும் திரண்ட என்வினைகள் நீங்கவும், நான்முழுமையுறவும் உனது அருட்பெருமை மிக்க கடைக்கண் பார்வையால் என்னைக் காத்தருள்வாயாக.

**விளக்கம்** : வெல்லக்கட்டி; உடல் நலத்துக்கு மட்டும் உதவுவது. தேன்; உடல் நலம் தருவதுடன் உடல் நோயும் தீர்ப்பது, ஆதலின், நம்வேண்டுதலுக்கேற்ப, வெல்லக்கட்டி போல் இம்மை இன்பம் தருபவள் என்றும், தேன் போல் இம்மை நலத்துடன், உயிர் நோயினை - மும்மலத்தை - தீர்த்து வீடுபேறும்அருள்வாள் இவள் என்றார்.

**இலக்கண குறிப்பு** : கன்னல் - கருவி ஆகுபெயர். தேனே-உருவகம்.

**9. நெஞ்சம்உன் பாதம் காண நினைக்கஒண் ணாத என்றன்**
**வஞ்சகப் புலனை ஆண்டு வாழ்விக்கும் விமலி தூயாய்**
**தஞ்சம்என்(று) அடைந்தார்க்(கு) என்றும் தாழ்ந்திடா(து) அருள்புரிந்தாய்**
**கஞ்சமே இடங்கொள் வாலைக் குமரியே காவாய் அம்மா.**

**குறிப்புரை** : வஞ்சகப்புலன் = கூடவே இருந்து எனக்குக் குழி பறிக்கும் சுவை, ஒளி. ஊறு, ஓசை, நாற்றம் பற்றிய அறிவு. விமலி=எக்காலமும் மலமில்லாதவளே. கஞ்சம்=அடியவர் உள்ளத் தாமரை. வாலை=இளமைபொருந்திய.

**பொழிப்புரை** : அடியவரது உள்ளத்தாமரையில் எழுந்தருளி யுள்ள என்றும் இளமையான குமரியே! என்உள்ளத்தில் உன்னை நினைக்கவொட்டாது தன்போக்கில் என்னை ஈர்த்துச் சென்று, குழிபறிக்கும் என் ஐம்புலன்களையும் தடுத்து, அவற்றை நல்வழியில் செலுத்தி ஆளும் எக்காலமும் மலமில்லாதவளே! தூயவளே! உன்னை அடைக்கலமாக அடைந்தவர்கள் தாழாது எப்போதும் அருளிக் காக்கின்ற தாயே! என்னைக் காத்தருள்க.

**விளக்கம்** : வஞ்சகப்புலன் :

வீறு துன்பம் செய்ய வந்த அஞ்சுபுல வேடர்.
- தாயுமா. பராபரக். 265

வாயில்ஓர் ஐந்தில் புலன்எனும் வேடர் வந்துஎனை ஈர்த்து
- சிவன்செயல். 5

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து
- சிவஞானபோதம். சூ. 8



**இலக்கணக் குறிப்பு** : கஞ்சம் - உருவகம்.

**10. பூமகள் பொலிந்து நிற்கப் பொங்கிடும் செல்வம் ஓங்கும்**
**நாமகள் கலையும் ஈய நல்லன எல்லாம் மல்கும்**
**கோமள வல்லி குங்கும சுந்தரி உன்பால் என்றும்**
**தாமம்நின் தாளில் சாத்தும் தளர்விலா(து) அன்பர்க்(கு) அன்றே.**

**குறிப்புரை** : கோமளம்=இளமை. வல்லி=கொடி. தாமம் = மலர் மாலை. நின்தாளில் தாமம் சாத்தும் அன்பர்க்கு அன்றே தளர்விலாது பூமகள்.......மல்கும் என்க.

**பொழிப்புரை** : என்றும் இளங்கொடியாக விளங்கும் அருள்தரு குங்குமசுந்தரித்தாயே, உன் எதிர் வந்து உன் திருவடிகளில் மலர்மாலை சாத்தி வணங்கும் அன்பர்களிடம் அப்போதே திருமகள் பொலிவுடன் விளங்குவதால் செல்வம் பொங்கி மேன்மேல்மிகும், கலைமகள் எல்லாக் கலைகளையும் வழங்க அதனால் நல்லன எல்லாம்பெருகும். இம்மாலை சாத்தும் அடியேற்கும் அப்பேறுகளை அருள்க.

**விளக்கம்** : உமையவள் ஆகிய இவ்வம்மை, திருமகளைத் தன் வலக்கண்ணாகவும், கலைமகளைத் தன் இடக் கண்ணாகவும் கொண்டவள் ஆதலின் இவளது திருநோக்கால், இவளை வழிபடுவோரிடம் செல்வமும், கலைகளும் பொங்கிப் பொலியும். (திருவிளையாடற்புராணம்)

**இலக்கணக் குறிப்பு** : கலையும் - இறந்தது தழுவிய எச்சவும்மை.



# சண்டேசுரர் வணக்கம்

**சிந்தையில் சிவனை வைத்துச் சிறக்கும்பூ சனைகள் பண்ணி**
**வந்தனை செய்யும் பிள்ளை இன்நெறி காணாத் தந்தை**
**உந்தவே குடப்பால் தன்னை உருத்தெழும் சீற்றத் தாலே**
**தந்தைதாள் சிதைத்த சண்டி கேச்சுரர் தாள்கள் வாழி.**

**குறிப்புரை :** பிள்ளை=மகனாகிய விசாரசர்மர். தந்தை= தந்தையாகிய எச்சதத்தன்.

**பொழிப்புரை :** தமது மனத்தில் சிவபிரானை எழுந்தருளச்செய்து மணலால் கூப்பிய சிவலிங்கத் திருமேனிக்கு மிகச்சிறந்த பூசனைகள் செய்து வழிபடும் தன் மகனாகிய விசாரசர்மன் வழிபாட்டினை எண்ணிப்பாராத தந்தையாகிய எச்சதத்தன், மகன் செய்யும் பூசனைக்கு மேலும் உதவவுள்ள குடத்துப் பாலைக் காலால் இடறிக் கவிழ்த்ததால் எழுந்த சினத்தால் அத்தந்தையின் இருகால்களையும் வெட்டி, சண்டீச பதம் பெற்றவரின் திருவடிகள் வாழ்க.

**விளக்கம் :** இடறியதும் துணித்ததும்:

வைத்ததிரு மஞ்சனக் குடப்பால் காலால் இடறிச்
சிந்தினான் - பெரிய பு.1260.

தாதை இருதாளும் துணித்த மைந்தர் பெரிய பு.1262.

இடறியது ஒருகாலேயாயினும் அக்குற்றத்துக்குத் துணை நின்ற மறுகாலையும் துணித்தார், குற்றத்திற்குத் துணை செய்வதும் குற்றமேயாதலின்.

வாழ்த்துதலில் இருவகையுண்டு. அவை : கீழோரை மேலோர் வாழ்த்துதல், மேலோரைக் கீழோர் வாழ்த்துதல். கீழோரை மேலோர் வாழ்த்துவதால் கீழோர் உயர்வர். இனி, மேலோரைக் கீழோர் வாழ்த்துவதால் கீழோர் உயர்வர்.



வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனம்நின்பால்
தாழ்த்துவதும் தாம் உயர்ந்து தம்மைஎலாம் தொழ வேண்டி
- திருவாசகம்.20

இத்திருவாசகத்தில் உள்ள பிறப்பறுதிடுவான் வாழ்த்துவதும் கூட, தான் பெற விரும்பும் - மீஉயர்வான வீடுபேறு கருதியதே.

## வாழ்த்து

வாழ்கவே தத்தின் முன்னோன் கூவிள வனத்தில் என்றும்
வாழ்ககுங் குமசுந் தரியாள் வாழ்கபூ வாளி ஊர்தான்
வாழ்கஅப் பதியின் மேன்மை வளம்தரும் பொன்னி நாடு
வாழ்கவே வையம் எல்லாம் வகையுறு சைவம் வாழ்க.

**குறிப்புரை :** வகையுறு=தரம்மிக்க.

## இசைப்பாடல் - 1

இராகம் : மோகனம் தாளம் : ஆதி

**பல்லவி**

திருவடி தந்திடும் தீனத யாபரா
திருமூல நாதனே தேவ தேவா - திருவடி

**அனுபல்லவி**

திருவுடைச் சென்னியில் திங்களும் கங்கையும்
திகழத் தரித்திட்ட திவ்யம னோகரா - திருவடி

**சரணம்**

தங்கும் உயிர்க்கெலாம் தாயகம் ஆகியே
எங்கும் நிறைந்திடும் ஏகப ராபரா
குங்கும சுந்தரி கொள்ளும் மனோகரா
சங்கர னேசிவ சற்குரு நாதா - திருவடி

உன்திரு மலரடி உகந்திடும் அடியார்
பொன்னொடு போகமும் பொலிந்திட உடையார்
புன்மைத விர்த்திடும் பூவா ளூர்தனில்
என்அரும் துணைவராய் எங்களைக் காத்திட - திருவடி

## இசைப்பாடல் - 2

இராகம் : பைரவி தாளம் : ஆதி

**பல்லவி**

குங்கும சுந்தரி கழலிணை நம்பினோர்
மங்கும் பிறவி அறுப்பார் மாநில மதில் - குங்கும

**அனுபல்லவி**

கங்கை அணியும் திருமூல நாதர் தமது
பங்கினில் வாழ்ந்திடும் பாக்யவ தியாமந்தக் - குங்கும

**சரணம்**

குஞ்சர முகனையும் குமரனையும் ஈன்றவள்
பஞ்சகோ சத்துக்கப் பால் பவித்திறைஞ் சுமவள்
தஞ்சம்என்றோர்க்கருள் தந்திடும் தாய்அவள்
விஞ்சிடும் செல்வமும் விரைந்தளிப் பாளிவள் - குங்கும

தேவாதி தேவர்கள் தேடிக்கா ணாதவள்
நாவாரத் துதிசெய்யும் நல்லார்க்கு நல்லவள்
பூவாளூர் தனில்என்றும் புகழாய்வாழ்ந் திருப்பவள்
காவா தொழியாள் நம்மைக் கன்னல் மொழியாளிவள்
- குங்கும

திருச்சிற்றம்பலம்



## பூவாளூர்
## அருள்தரு குங்குமாம்பிகை பதிகம்

ஆசிரியர்
பூவாளூர் சைவசித்தாந்த சங்க உறுப்பினர் ஆகிய
தஞ்சை அடஞ்சூர்
வித்துவான் **கா.துரைசாமி பிள்ளை**

### சாற்றுக் கவிகள்

1. சித்தாந்தசரபம், அட்டாவதானம், பூவை. கலியாண சுந்தர முதலியார்.

பூவாளூர்க் குங்குமசுந் தரியம்மைக்(கு) ஒருபதிகம்
புலவர் மெச்ச
நாவார இயற்றினன்கா மாட்சிவேள் அரும்புதல்வன்
நாளும் சைவப்
பாவாணர் சிரோமணிபற் பலகலையும் உணர்ந் (து) உரைக்கும்
பண்பார் சீலன்
காவாரும் உயர்அடஞ்சூர் வருபெரிய துரைசாமிக்
கவிஞன் தானே.

2. திருவாரூர் சு.சாமிஜயா தேசிகர்
பூவாளூர் சைவசித்தாந்த சங்கத் தலைவர்.
திருவாரூர்ச் சிவனடியார் திருக்கூட்டத்து ஒருவர்.

சீரோங்கும் பூவாளூர் செழித்(து)ஓங்க ஓங்கும்
தேவிகுங்கு மாம்பிகைபொன் செய்யமலர்த் தாட்கு
நாரோங்கும் புலவர்களி கூரஒரு பதிகம்
நற்சுவையோ(டு)அணிந்(து)உயர்ந்தான்
அவன்யார் என்னில்

காரோங்கும் பொழில்உடுத்த அடஞ்சூர்வாழ் தூய
காமாட்சி வேள்தவத்தில் வந்துதித்த தோன்றல்
ஏரோங்கும் எழில்மடவார் மடல்எழுதும் அழகன்
என்நண்பன் துரைசாமி எனும்கவிஞர் ஏறே.

3. பெருவளநல்லூர் **வீரமாகேசர். வி.சுப்பையர்**
பூவாளூர் சைவசித்தாந்த சங்கத் துணைத்தலைவர்.

அணிமேவு வயல்மீது புனல்பாயக் கயல்ஏறு
மதிசோலை தனிலேகிளி
வணமேவு மறைஓது மதனாபு ரீசன்கூ
விளமூலர் இடமேஅமர்
பணிசேர அணிகும்ப வலிமேல்நற் பதிகம்சொல்
லினனால்அ டஞ்சூரில்வாழ்
மணமேவு கலைமேவு குணமேவு துரைசாமி
மகிழும்நன் நாவலனுமே.

4. பூவாளூர் **சி.சபாபதி செட்டியார்**
பூவாளூர் சைவசித்தாந்த சங்கத்தின் ஞான முத்தமிழ்
வாணி புத்தக சாலை அதிபர்,

காவி னுக்(கு)அர சன்ப ணிந்தெழு காமர் பூம்பதி அமரருள்
கர்த்த னாம்திரு மூலர் பால்ஒளிர் கருணை குங்கும சுந்தரி
மாஇ யல்கொள்நல் பாத பங்கய மலர்க ளைத்துதி செய்(து)உயர்
மணம்ம லிந்துபல் சுவைகொள் இன்தமிழ்ப் பதிக
மாம்தொடை சூட்டினான்
நாவி னுக்கரை யர்கு லத்(து)அடஞ் சூரில் வந்தகா மாட்சி வேள்
நற்ற வப்பயன் ஆன நம்துரை சாமி நாவலன் ஆங்கதின்
மேவு சீரினை நோக்கி அச்சினில் ஏற்றி ஈந்தனன் நண்பொடும்
விரவு செந்தலை வாழும் ஆட்கொண்டான் என்னும்ஓர்பெரு
வள்ளலே.



பூவாளூர்
அறுவை வணிகர் **செ.சி செம்புலிங்கம் செட்டியார்**
பூவாளூர்
சைவ சித்தாந்த சங்கத்தின் கணக்குத் தணிக்கையாளர்

5. அ. பூமணக்கும் புயல்மணக்கும் பொழில்மணக்கும் எழில்மணக்கும்
பூவா ளூரில்
தேன்மணக்கும் செழுங்கொன்றைச் சிரம்மணக்கும்
கரம்மணக்கும்
செம்மான் எம்மான்
பாமணக்கும் திருமூலர் பால்மணக்கும் பைங்கொடியின்
பதுமத் தாட்கு
நாமணக்கத் துதிப்பவர்கள் நலம்மணக்க ஓர்பதிகம்
நவின்றிட் டானால்.

ஆ. அன்னவன்தான் யாவன்எனில் அன்பதுவே ஓர்உருவாய்
அடஞ்சூர் வந்தோன்
என்னொடுபற் பலகலையும் எழிலுறவே கற்றுணர்தற்(கு)
ஏய்ந்த நண்பன்
கன்னன்எனப் பொருள்உதவும் காமாட்சி எனும்பெரியோன்
களிப்போ(டு) ஈன்ற
இன்இனிய நயகுணத்தான் துரைசாமி எனும்அரிய
இசைமிக் கோனே.



உ

## நூல்

### காப்பு - வணக்கம்

**1. விநாயகர்:**

பொன்ன கர்க்(கு)இறை பூமலர் நந்தனம்
மன்னி ஓங்கநீர் மல்குக ஜானனன்
துன்னி அன்பர் தொழுதகு நற்பதம்
தன்னை நாளும் தலைக்(கு)அணி ஆக்குவாம்.

**குறிப்புரை** : பொன்னகர்க்கு இறை = தேவருலக அமராவதி நகர்க்கு அரசன் - தேவேந்திரன். பூமலர்=பூக்கள் பொலிவு மலர்ந்த. நந்தனம்=நந்தவனம். மன்னி ஓங்க=செழிப்பில் நிலைத்து மேன்மையுற. நீர்மல்கு=காவிரி நீரினைப் பெருகச் செய்த. கஜானனன் = யானை முகத்து அருள்தரு விநாயகர்.

**பொழிப்புரை** : தேவருலகத்து அமராவதிநகர் அரசனான தேவேந்திரனது (அசுரர்களுக்கு அஞ்சிச் சீர்காழியில் ஒளிந் திருந்த போது இறைவழிபாட்டுக்கு உதவிய) பொலிவுமலர்ந்த நந்தவனம் செழிப்பில் நிலைத்து மேன்மையுற, அகத்திய முனிவரது கமண்டலத்தில் இருந்த நீரினைக் காவிரியாகப் பெருகச்செய்த யானைமுகத்து அருள்தரு விநாயகப் பெருமானின் நன்மைகளையே வழங்கும் திருவடிகளை நாடோறும் நம் தலைக்கு அணிகலனாகச் சூடுவோம்.

**விளக்கம்** : விநாயகர், காக்கைவடிவில் வந்து அகத்தியரது கமண்டலத்தைக் கவிழ்த்து நீரினைக் காவிரியாகப்பெருகச் செய்ததை, கரகம் கவிழ்த்த காவிரிப்பாவை என்று சிலப்பதிகாரம் குறிப்பிடும். மேலும் இதனைக்

. . . . . . . . . . . . . . கயமுகத்து அவுணற் செற்றோன்
குண்டிகை அதனைத் தள்ளிக் குளிர்புனல் கன்னி அன்ன
பண்டையில் இசைவு செய்தான் பாரில்நீ படர்தி
என்றான். செய். 36



**உ. அருள்தரு திருமூலநாதர் :**

ஒருமூல மறை ஆதி கலைகட்(கு)எட் டாநிலையாய்
உலகம் யாவும்
தருமூல காரணமாய்ச் சச்சிதா னந்தமயச்
சுயம்பு ஆகிக்
கருமூலம் ஒழித்தருளிக் கதியையளித்(து) அன்பரைஆள்
காமர் ஊர்வாழ்
திருமூல நாதர்பதம் சிரம்அணிந்து வல்வினையைச்
சிதைவு செய்வாம்.

**குறிப்புரை** : மூலம்=ஆதி. மறை ஆதி கலைகள்=வேதம் முதலிய கலைகள். சத்து சித்து ஆனந்தம் = உண்மை அறிவு இன்பம். சுயம்பு=தானேதோன்றியவன் - தந்தை தாய் இலான். கருமூலம்=பிறப்புக்குக் காரணமான இருவினைகள். கதி=வீடுபேறு. காமர்ஊர்=மன்மதபுரம் - பூவாளிஊர் என்பது பூவாளூர் என்று மருவியது.

**பொழிப்புரை** : ஒப்பற்ற ஆதிமறை முதலிய கலைகளுக்கு எட்டாதவனாய், அண்டமெலாம் படைத்த மூலகாரணனாய், உண்மை அறிவு இன்பவடிவாகி, பெற்றவரின்றித் தானே தோன்றியவனாய், உயிர்க்குலத்தின் பிறப்புக்குக் காரணமான அவற்றின் இருவினைகளை ஒழித்து, வீடுபேற்றினையளித்துத் தன் அடியவர்களை ஆட்கொள்ளப் பூவாளூரில் எழுந்தருளி யுள்ள அருள்தரு திருமூலநாதர் திருவடிகளை நாம் நம் தலைக்கண் சூடி இருவினைகளையும் அழிப்போம்.

**விளக்கம் :** வேதங்களும் கலைகளும் பாசஞானங்கள் ஆதலின் அவற்றுக்குளட்டான். பதி ஞானமே அவனையடைவிக்கும். பதிஞானமாகிய் திருமுறைகளே அவனையடைவிப்பன.

வேதங்கள் ஐயாஎன ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே
- சிவபுராணம்

**இருவினைகளுமே பிறவிக்கு வித்து :**

இருவினை இன்பத் துன்பத்து இவ்வுயிர் பிறந்து இறந்து
வருவது போவதாகும் - சித்தியார். 94

3. அருள்தரு குங்கும சுந்தரியம்மை :

புங்கவர்கள் முதலாகத் தேவர்களும் புகழ்ந்தேத்தும்
பூவா ளூரில்
திங்களணி திருமூல நாதர்பதச் சிலம்(பு)உதவும்
தீர்த்தம் ஆகும்
பங்குனியின் தென்கரையில் பழவடியார் பணிந்(து)ஏத்தப்
பவத்தை நீக்கும்
குங்குமசுந் தரியம்மை சரணபங் கயம்முடிமேல்
கொண்டு வாழ்வாம்.

**குறிப்புரை** : புங்கவர்=மேலோர், தென்=தெற்கு. பவம்=பிறப்பு. சரணபங்கயம்=திருவடித் தாமரை.

**பொழிப்புரை** : மேலானவர் முதல் தேவர்களும் புகழ்ந்து வணங்கும் பூவாளூரில் பிறைசூடி எழுந்தருளியுள்ள அருள்தரு திருமூலநாதர், தமது காற்சிலம்பை மேற்குநோக்கி எறிந்த போது அதுவிழுந்த இடத்தில் கங்கை, பங்குனி ஆறாகப் பெருகி வர, பூவாளூரில் அப்புனித ஆற்றின் தெற்குக் கரையில் திருக்கோயில் கொண்டு பழைமையான அடியவர்கள் பணிந்து ஏத்த அவர்களது பிறப்பினை நீக்கியருளும் அருள்தரு குங்கும சுந்தரியம்மையின் திருவடித் தாமரைகளை நாம் நம் தலைக்கண் சூடி வாழ்வோம்.

**விளக்கம்** : இரயிக்குவ முனிவரின் பக்தியான வேண்டு கோளுக்கு இரங்கிய அருள்தரு திருமூலநாதர், தமது கால் சிலம்புகளில் ஒன்றை மேற்குநோக்கி எறிய, அது விழுந்த இடத்தில் கங்கை, பற்குனி ஆறாகப் பெருகியது என்பது பூவாளூர்ப் புராணம் செய். 661-662.

(பற்கு=பாவம். நீ=நீக்குவது. பற்குனி= தன்னில் நீராடினோர் பாவத்தை நீக்குவது)

**இலக்கணக் குறிப்பு** : சரணபங்கயம் - உருவகம்.



4. அருள்தரு வெள்ளை வாரண விநாயகர். (தலவிநாயகர்)

**வெள்விடைமேல் வீற்றிருக்கும் வித்தகர்தம் திருக்கரத்தில்**
**விளங்கும் சூதக்**
**கள்ஒழுகும் கனிக்காகக் கந்தவேள் தனக்குமுனம்**
**கயிலை வாழ்வைத்**
**தள்ளரிய அன்பினொடும் வலம்வந்து காமர்ஊர்**
**தனித்து வாழும்**
**தெள்ளுமதம் பொழிவெள்ளை வாரணத்தின் செந்தாளைச்**
**சிந்தை சேர்ப்பாம்.**

**குறிப்புரை** : விடை=இடபம். வித்தகர்=அறத்தின் வடிவான சிவன். சூதம்=மாமரம். கள்= தேன் - இனிமை. தனித்து = ஒப்பற்று. செந்தாள்=செம்மையானதிருவடி -அழகியதிருவடி.

**பொழிப்புரை** : அறத்தின் குறியீடான தூவெள்ளேற்றின்மேல் அம்மையப்பராக எழுந்தருளும் ஞானமேவடிவான சிவபிரான் திருக்கரத்தில் விளங்கிய இனிய சாறு ஒழுகும் மாங்கனியின் பொருட்டு, முருகப்பெருமானுக்கு முன்னதாகக் கயிலையில் வீற்றிருக்கும் சிவபரம்பொருளை வலம்வந்து கனிபெற்றுப் பூவாளூரில் ஒப்பற்று எழுந்தருளியுள்ளவராகிய,தெளிந்த மதம் பொழியும் அருள்தரு வெள்ளைவாரண விநாயகரின் திருவடி களை மனத்திற்கொண்டு போற்றுவோம்.

**விளக்கம்** : **வெள்விடை** :

வெள்ளிக் குன்றன்ன விடையான்
- திருமு.6.திருவதிகைவீ.2.

வித்தகர் : ஞானவடிவர் :

அறிஞர்க்கு அறிவாம் உருவும் உடையான்
- திருவருட்பயன்.5.

(அறிவாம்உரு=ஞானவடிவம். அறிஞர்=ஞானியர்)

**மாங்கனி பெற்றது** :

தந்தை வலத்தால் அருள் கைக்கனியோனே - திருப்புகழ்

தனித்து வாழும் என்பதற்கு சித்தி புத்தியன்றித் தனித்துள்ள எனினும் அமையும்.

இவ்வெள்ளை வாரணரே தலவிநாயகர். இங்கு இவர் மட்டுமே இருந்தார். மிகமிக அண்மையில் கரிய சிலை வடிவிலான ஒரு விநாயகரும் இங்கு எழுந்தருளிச் செய்யப் பெற்றார்.

**இலக்கணக் குறிப்பு:** வெள்ளை வாரணம் - வெள்ளை - இனம் விலக்கிய அடை மொழி.

**5. அருள்தரு குமரப்பெருமான் :**

**ஒருமான் புதல்வ னாய்உதித்(து) அங்கு**
**உம்பர் முதலோர்க்(கு) அரசளித்தே**
**ஒருமான் புதல்வி தனைமணந்(து)அன்று**
**உவரி சுவர வேல்விடுத்தே**
**ஒருமான் முதலோர் தொழுதேத்த**
**உலகம் தனையே வலம்வந்தே**
**ஒருமா மரமாய் உதித்தவன்தாள்**
**உன்னி வினைக்கு விடைகொடுப்பாம்.**

**குறிப்புரை :** ஒருமான்=ஒப்பற்ற மகத்துவன் - சிவபிரான். ஒருமான்புதல்வி = மகத்துவனான இந்திரனின் ஒரே மகளான தெய்வ யானை. உவரி=கடல். சுவற=வற்ற. மால்+முதலோர். ஒரு மாமரம் = ஒப்பற்ற பெரிய வேங்கை மரம். உன்னி=நினைத்து வழிபட்டு.

**பொழிப்புரை :** ஒப்பற்ற மகத்துவனாகிய சிவபிரானுக்கு மகனாகத் தோன்றி, தேவர்கள் அசுரர்களிடம் இழந்த அரசாட்சியை மீட்டுத் தந்து, தேவேந்திரன் மகளாகிய தெய்வ யானை யம்மையை மணந்து, அன்றொரு நாள் உக்கிரகுமார பாண்டியனாகத் தோன்றியபோது கடல்வற்ற வேல்எறிந்து, திருமால் முதலியோர் வணங்கிப் போற்ற, மாங்கனியின் பொருட்டு உலகை வலம் வந்து, வள்ளிநாச்சியார் பொருட்டுத் தினைப்புனத்தில் தனித்துநிற்கும் வேங்கைமரமாகத் தோன்றிய அருள்தரு முருகப்பெருமான் திருவடிகளை மனத்தால் இறுகப் பற்றிக் கொள்வதன்மூலம் இருவினைகட்கும் விடைதந்து வீடுபெறுவோம்.



**விளக்கம் : உவரிசுவற வேல்விடுத்தது :**

எடுத்தவேல்வ லம்திரித்(து)எ றிந்தவேலை வேல்முனை
மடுத்தவேலை சுஃறெனவ்வ றந்துமான வலிகெட
வடுத்துவேரி வாகையின்றி அடிவணங்கு தெவ்வரைக்
கடுத்தவேல்வ லான்கணைக் காலின்மட்ட தானதே
- திருவிளையா. கடல்சுவற.14

**ஒருமாமரமாய் உதித்தவன்:**

ஆங்கது காலை தன்னில் அடிமுதல் மறைக ளாக
ஓங்கிய நடுவண் எல்லாம் உயர்சிவ நூல தாகப்
பாங்குஅமர் கவடு முற்றும் பல்கலை யாகத் தான்ஓர்
வேங்கையின் உருவம் ஆகி வேற்படை வீரன் நின்றான்
- திருவிளை. வள்ளிய.75

(வேங்கை= வேங்கைமரம். அடிமுதல் = வேர்.)

**௬. நால்வர் :**

**அப்பினில்ஏ(டு) ஏறவிட்ட அண்ணலார் திருப்பதமும்**
**அறையைக் கொண்டே**
**அப்பினைமுன் நனிகடந்தார் அருட்பதமும் அமைஓடம்**
**இன்றிப் பொன்னி**
**அப்பினைநற் கரைசெய்தார் அலர்ப்பதமும்**
**அமலனைக்கொண்(டு)**
**அந்நாள் வைகை**
**அப்பினைநன்(கு) அடைத்திட்ட அருள்மணிவா சகர்பதமும்**
**அகத்துட் கொள்வாம்.**

**குறிப்புரை :** அப்பு=தண்ணீர். ஏடு=பனை ஓலைஏடு. அறை = கருங்கற்பாறை. அமை=தக்க. அமலன்=எக்காலத்தும் மலமில்லாத சிவபிரான்.

**பொழிப்புரை :** அந்நாளில் வைகையாற்று நீரில் வாழ்க அந்தணர் பதிகம் எழுதிய பனைஓலை ஏடு நீரினை எதிர்த்துச் சென்று கரைஏறச்செய்த திருஞானசம்பந்தரின் திருவடி, தன்னைக் கட்டியுள்ள பாறையையே தக்க ஓடமாகக்கொண்டு

கடல் நீரினைக் கடந்து கரையேறிய திருநாவுக்கரசரின் அருளார் திருவடி, காவிரி வெள்ளத்தைக் கரைபோல் அமையச் செய்து காவிரியைக் கடந்து திருவையாற்றுச் செம்பொற்சோதியை வழிபட்டு மீண்ட சுந்தரரின் மலர்ஒத்த திருவடி, வைகைப்பெரு வெள்ளத்தைச் சிவபெருமான் மூலம் அடைபடச் செய்த அருள்மணிவாசகர் திருவடி ஆகிய திருவடிகளை நாம் நம் உள்ளத்தில் பதித்துப் போற்றுவோம்.

**இலக்கணக் குறிப்பு** : பதமும் என்றுவரும் நான்கின் உம்மைகளும் எண்ணும்மைகள். இச்செய்யுள் சொற்பொருள் பின்வருநிலை அணி.

**7. மெய்கண்டதேவர்.**

**மெய்கண்ட நெறிஎதுஎன் றிடில்சிவன்தாள் மேவல்என்றே**
**விளங்க நாளும்**
**மெய்கண்டம் சிலிர்த்துவிம்ம வேதாந்தத் தெளிவாக**
**விளங்கும் தூய**
**மெய்கண்டு போல்தமிழில் சிவஞான போதமதை**
**விரித்துத் தந்த**
**மெய்கண்ட தேவன்அடி கைகொண்டு தொழுதுசிர**
**மீதில் கொள்வாம்.**

**குறிப்புரை** : மெய்கண்ட நெறி=சிவ நெறி. சிவன்தாள் மேவல் = சிவபிரானது திருவடியைப் பொருந்துதலே. மெய் கண்டம் சிலிர்த்து விம்ம=மெய்சிலிர்த்துக் கண்டம் விம்ம.கண்டம் விம்ம=குரல் தழுதழுக்க. வேதாந்தம்=உபநிடதம்.மெய் கண்டு போல்=மெய்ப்பொருளைக் கற்கண்டு போல் இனிக்க. விரித்துத் தந்த - விரிவாகக் கூறியருளிய.

**பொழிப்புரை** : சிவநெறி எது என்றால்அது, சிவபிரானது திருவடியைப் பொருந்துதலே என்பது விளங்க, வேதாந்த மாகிய உபநிடதத்தின் பொருள் விளங்க, அதன் மெய்ம்மைக் கருத்தைத் தமிழில் கற்கண்டுபோல் இனிக்க அதனைக் கற்பவர் மெய்சிலிர்க்கவும், குரல் தழுதழுக்கவும் சிவஞான போத நூலாகக் கூறியருளிய மெய்கண்டதேவரின் திருவடிகளை



மனத்தில்கொண்டு வணங்கி, அவற்றைத் தலையிலும் சூடுவோம்.

**விளக்கம்** : மெய்கண்டார் பெருஞ் சிறப்பு:

பொய்கண்டார் காணாப் புனிதர்எனும் அத்துவித
மெய்கண்ட நாதன்அருள் மேவும்நாள் எந்நாளோ
- தாயுமான. எந்நாட் கண்ணி.

**வேதாந்தத் தெளிவு** : வேதாந்தம்=உபநிடதம். வேதத்தின் கரும காண்டத்தில் பல கடவுளர் பேசப் பெறுகிறார்கள். ஞான காண்டத்தில் - உபநிடதத்தில் சில இடங்களில் பல கடவுளரைப் பற்றிய பேச்சுகளும், சில இடங்களில் கடவுள் பலரில்லை ஒருவனே என்ற பேச்சுகளும் கேட்கப்படுகின்றன என்பது வேதம் வேதாந்தம் அறிந்தவர் கருத்து. இவ்விருவேறு கருத்துகளுள் கடவுள் ஒருவனே என்பதை மட்டுமே வேதாந்தச் சாறாக ஏற்றுக் கொண்டுள்ளது சைவம். இக்கருத்தே சாறு எனில் பிறவற்றின் தன்மை . . . . . . . . ?

**சைவம்** : தேனமுது, திவ்வியம் பழுத்தது, தெளிவானது:

ஒரும்வேதாந்தம் என்ற உச்சியில் பழுத்த
ஆரா இன்ப அருங்கனி பிழிந்து
சாரம் கொண்ட சைவசித் தாந்தத்
தேனமுது - பண்டார மும்மணிக்.11.32-35.

திவ்வியம் பழுத்த சைவசித் தாந்தம்
- பண்டாரமும்மணிக்.5.23.

வேதாந்தத் தெளிவாம் சைவசித் தாந்தத் திறன்
- சிவப்பிரகாசம்.7.4.

சிவஞான போதம், முதல் நூலே என்ற அறிஞர் பெருமக்களின் ஆய்வு முடிவும் ஈண்டு கருதத்தக்கது.

**இலக்கணக் குறிப்பு** : இச்செய்யுள் சொல் பின்வருநிலையணி.



## நூல்

### பதிகம்

1. பூமேவு வதனசெங் கமலமும் திருநுதல்
பொட்டழகும் இருகாதினில்
பொங்குதோ டும்குமிழ் தங்குமூக் குத்தியும்
புன்னகைத் தரளஒளியும்
தேமேவு மொய்ம்பினில் பதக்கமும் கைகளில்
செகம்மெச்சு கற்கடகமும்
திகழும்இடை தன்னிலே ரத்னஒட் யாணமும்
சேவடியில் ஒளிர்சிலம்பும்
காமேவு உனதுதிரு அழகினொடு வந்துமே
காட்சிதந்(து) அருள்புரிகுவாய்
கன்னியே அன்னையே உன்னையே நம்பினேன்
கைவிடுதல் நீதியாமோ
கோமேவு சோலைவளர் பூவாளி யூர்தனில்
கொன்றையொடு தும்பைமுதலாக்
கொங்குலவு தொங்கல்அணி சங்கரன் பங்கில்வளர்
குங்குமாம் பிகைவல்லியே.

**குறிப்புரை :** கோமேவு = வானளாவிய. தொங்கல் = மார்பு மாலை. பூமேவு = பொலிவு பொருந்திய. தரளம்=முத்து. மொய்ம்பு = மார்பு. கற்கடகம்=நவமணிகள் பதித்த கடகம். காமேவு = கற்பகத் தன்மை வாய்ந்த. நீதியாமோ = நீதியன்று.

**பொழிப்புரை:** வானளாவிய சோலைகளையுடைய பூவாளூரில், மணங்கமழும் கொன்றைமலர், தும்பைமலர் ஆகியவற்றா லான மாலைகள் அணிந்த சங்கரனாகிய அருள்தரு திருமூல நாதரது இடப்பாகம் பிரியாது உள்ள அருள்தரு குங்குமாம்பிகை ஆகிய கொடியே! உனது பொலிவு உடைய முகமாகிய செந்தாமரையும், அழகிய நெற்றியில் இட்ட அழகுப் பொட்டும், இரு செவிகளிலும் ஒளி பொங்கும் தோடுகளும், குமிழம்பூவாக உள்ளமூக்கில் அணிந்த மூக்குத்தியும், புன்முறுவல் பூக்கும் பற்களாகிய முத்துகளின் ஒளியும், தெய்வத்தன்மை பொருந்திய திருமார்பில் பதக்கமும்,கைகளில் உலகு புகழும் நவமணிகள் பதித்த கடகமும், நுண்ணிய இடையில் இரத்தினங்கள் பதித்த ஒட்டியாணமும், செம்மை நலந்தரும் திருவடிகளில் சிலம்பும் ஆகியவற்றுடன் கற்பகத் தன்மை வாய்ந்த அருள்புரியும் உன் தெய்வத் தன்மை வாய்ந்த அழகுடன் என்முன்வந்து காட்சி வழங்கி அருள்செய்தருள்க. கன்னியே,தாயே, உன்னையே நம்பியுள்ள என்னைக் கைவிடுதல் நீதியன்று; அருள்புரிக.



**விளக்கம்:** பொருளை ஆற்றலும், ஆற்றலைப் பொருளும் பிரிவதில்லை என்பது அறிவியல் முடிபு. அப்பன் பொருள் - குணி, அம்மை பொருளைப் பிரியாத ஆற்றல்-குணம். எனவே அம்மையானவள் அப்பன் இடப்பாகம்-இடம் பிரியாமை யைப் "பாங்கில் வளர் குங்குமாம்பிகை" என்றார்.

**இலக்கணக் குறிப்பு :** தொங்கல், இடை - காரணப் பெயர்கள். வளர் குங்குமாம்பிகை - வினைத்தொகை. வதன செங்கமலம், புன்னகைத் தரளம்-உருவகம். பொங்குதோடு, ஒளிர் சிலம்பு - வினைத்தொகைகள். நீதியாமோ - ஓகாரம் எதிர்மறை. இச்செய்யுள் கேசாதி பாத வருணனையுடையது.

2. தாயது வயிற்றகத்(து) ஓயா(து) உதித்துமே
சத்(து)அசத்(து) எண்ணாமலே
தரணிதனி லேகிடந்(து) எய்த்துமே பலவாய
சஞ்சலம் தான்அடைந்தே
மாயவலை வீசியே நேயம்மிக ஊட்டிடும்
மங்கையர்கள் வசமாகியே
மதியழிந்(து) உழல்கின்ற விதியிலேன் எற்குநின்
மலர்ப்பதம் தந்தருளுவாய்
தேயமது தன்னிலே உன்னருள் அலாதுஓர்
சிறுதுணையும்அறியேன்அம்மா
சீரணி பூரணி நாரணி காரணி
சிற்பரா னந்தரூபீ

கூய்அருங் குயில்உலவு பூவாளி யூர்தனில்

கொன்றையொடு தும்பைமுதலாக்

கொங்குலவு தொங்கல்அணி சங்கரன் பங்கில்வளர்

குங்குமாம் பிகைவல்லியே.

**குறிப்புரை :** அருங்குயில் கூய் உலவு. கூய்=கூவி. சத்து, அசத்து=அறிவு உடையது. அறிவற்றது. தரணி=உலகம். நேயம்=மிக்க ஆசை. எற்கு= எனக்கு. சீரணீ=சிறந்த அழகியே. பூரணீ=முழுமையானவளே. நாரணீ=துர்க்கையே. காரணீ= அண்டத்தோற்றம், நிலைபேறு ஆகியவற்றுக்குக் காரண மானவளே. சித்பரானந்த ரூபீ=ஞானவடிவான மேலான இன்பத்திருவுருவே.

**பொழிப்புரை :** சிறந்த குயில்கள் கூவிப் பறக்கும் சோலைகளை யுடைய பூவாளூரில் மணக்கும் கொன்றைமலர், தும்பை மலர்களாலான மாலைகள் அணிந்த சங்கரனாகிய அருள்தரு திருமூலநாதரது இடப்பாகம் பிரியாத அருள்தரு குங்குமாம் பிகையாகிய கொடியே! சிறந்த அழகியே! முழுமை யானவளே! துர்க்கையே! அண்டத்தின் தோற்றம், நிலைபேறு ஆகியவற்றுக்குக் காரணமானவளே! ஞானவடிவினளான மேலான இன்பத்திருவுருவினளே! நான் ஓய்வின்றிப் பற்பல தாயர் வயிற்றில் கிடந்துபிறந்து, அறிவு உள்ளது இது, அறிவில்லாதது இது என்று அறியும் அறிவின்றி இவ்வுலகில் கிடந்து எய்த்தும், பற்பல துன்பங்களை அனுபவித்தும், வஞ்சனையான காமவலை வீசி அதில்மிக்க ஆசையூட்டும் விலைமாதர் வசமாய் அறிவிழந்தும் உழல்கிறேன். இவ்வுலகில் உன்னைத்தவிர என்னைக் கரைஏற்றும் சிறுதுணையும்இல்லை. ஆகவே உனது தாமரை மலர்த்திருவடிகளை எனக்கு வழங்கி அருள்புரிவாயாக.

**விளக்கம் :** அருங்குயில் கூய் உலவு என்றதனால் சோலைப் பெருக்கம் உணர்த்தினார். வெயில் நுழைகல்லாக் குயில்நுழை பொதும்பர் என்க



**தாயது வயிற்றில் ஓயாது உதித்தல் :**

ஏனைப்பல யோனியும் நினைப்பரும் பேதத்து
யாரும் யாவையும் எனக்குத் தனித்தனித்
தாயர் ஆகியும் தந்தையர் ஆகியும்
வந்தி ராததும் இல்லை; முந்து
பிறவா நிலனும் இல்லை; பிறிதில்
என்னைத் தின்னா உயிர்களும் இல்லை;
யான்அவை
தம்மைத் தின்னாது ஒழிந்ததும் இல்லை;
அனைத்தே காலமும்சென்றது; யான்இதன்மேல்இனி
இளைக்குமாறு இலனே.

- திருமுறை.11.திருக்கழுமல மும்.7:11-22.

சித்பரானந்தரூபீ : சத்திதன்வடிவு ஏதுஎன்னில் தடையிலா ஞானம்ஆகும் -சித்தி.62.

முழுஞானப் பெருக்கே வருக - மீ.பி.தமிழ்.வருகைப்.10.

3. அண்டகோ டிகள்யாவும் நலிதரா(து) இனி(து)ஈன்ற
அன்னைஉனைக் கன்னிஎனவே
அருமறைகள் ஆதிபல கலைகள்எல் லாம்எடுத்(து)
அறையும்அவ் வருமைஓரா
மிண்டர்தம் குழுவிடைச் சாரா(து)ஒ ழித்துமே
விளங்குநின் தூயதாய
விரைமலர்த் தாட்(கு)அன்பு மெய்யாக வேசெய்து
வெவ்வினையின் வேர்அறுக்கும்
தொண்டரொடு சேர்த்துவாழ் விப்ப(து)எனை என்றுகொல்
தோன்றுபச் சைக்கிள்ளையே
சோதியே நீதியே பேதியா வாதியே
சுத்தமெய்ஞ் ஞானவடிவே
கொண்டல்வளர் சோலைசூழ் பூவாளி யூர்தனில்
கொன்றையொடு தும்பைமுதலாக்
கொங்குலவு தொங்கல்அணி சங்கரன் பங்கில்வளர்
குங்குமாம் பிகைவல்லியே.

**குறிப்புரை :** நலிதராது=துன்புறாது. அறையும் = உறுதியாகக் கூறும். மிண்டர் = இடக்காகப் பேசுவோர். பேதியா = கெடுக்காத. வாதியே=முறைப்பாடு - ஒழுங்கு - உடையவளே. கொண்டல்வளர்= மேகத்தை மேன்மேல் வளர்க்கும்.

**பொழிப்புரை :** எங்கும் விளக்கமுறத் தோன்றும் பச்சைக் கிளியாக விளங்குபவளே! ஒளிவடிவானவளே! நீதியின் வடிவானவளே! யாரையும் கெடுக்காது வளர்க்கும் முறைப் பாடு உடையவளே!தூய மெய்ஞ்ஞானமாக விளங்குகின்ற வளே! மேகத்தை மேன்மேல் வளர்க்கும் சோலைகள் சூழ்ந்த பூவாளூரில்,மணக்கும் கொன்றை மலர்மாலையும், தும்பை மலர்மலையும் அணிந்த சங்கரனாகிய அருள்தரு திருமூல நாதரது இடப்பாகம் பிரியாத அருள்தரு குங்குமாம்பிகைக் கொடியே!கோடிக்கணக்கான அண்டங்கள் அனைத்தையும் தான் துன்புறாது உயிர்கள் இன்புற ஈன்றதாயே!உன்னை அரிய மறைகள் முதலிய கலைகள் அனைத்தும் கன்னிஎன்றே எடுத்துமொழியும்.இந்த அருமைப்பாட்டினை உணராது இடக்காகப் பேசுவோர் கூட்டத்தில் நான் சேராமல் என்னை நீக்கி,தூய்மையான மணம்மிக்க தாமரை மலர்ஒத்த உன் திருவடிகட்கு அன்புசெய்து, அதனால் கொடிய இருவினை யின் வேரினை அறுத்துப் பேராஇயற்கையாகிய வீடுபேறு அடைய உள்ள தொண்டர் கூட்டத்துடன் என்னைச் சேர்த்து வாழ்விப்பதென்று? இப்போதே அருள்க.

**விளக்கம் :** மேகத்தை உருவாக்குவதில் கடல்நீர் ஆவியாத லின் பங்குடன் மரங்கள் தமது இலைகளின் நுண்துளை வழியே இடையறாது வெளியேற்றும் நீராவியின் பங்கும்உள்ளது. இவ்வகை மேகத்தை மரமேகம்என்பர் அறிவியலார். மர மேகத்தை உருவாக்குவதில் சோலைகளின் பங்கினை நினைவூட்டுவது கொண்டல்வளர் சோலை என்ற தொடர். அண்டகோடிகள் : அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்

அளப்பரும் தன்மை வளப்பெரும் காட்சி
ஒன்றனுக்கு ஒன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன

- திருவாச. திருவண்டப்.1 - 4.



திருவாசகம் கூறும் இச்செய்தியை இன்றைய விண்வெளி அறிவியலின்; அண்டவெளி எல்லையின்றி விரிந்து கொண்டே செல்கிறது. அதில் ஒன்றுக்கொன்று வேறுபட்ட எண்ணற்ற உலகங்கள் உள்ளன என்ற முடிவு உறுதிப் படுத்துகிறது.

அண்டகோடிகள் . . . . . ஈன்ற அன்னை :

உலகு சூல் கொண்ட தலைவி

-காசிக்கலம்பகம்.

அண்டமெல்லாம் பூத்தாளை

- அபிராமி அந்தாதி.பயன்.

**தொண்டர் கூட்டப்பயன் :**

நிலையில் பொருளும் நிலையியற் பொருளும்
உலையா மரபின் உளங்கொளப் படுத்திப்
புல்லறிவு அகற்றி நல்லறிவு கொளீஇ
எம்ம னோரையும் இடித்துவரை நிறுத்திச்
செம்மை செய்யத் திருவுளங் கொண்ட
நற்றவத் தொண்டர் கூட்டம்
பெற்றவர்க்கு உண்டோ பெறத்தகா தனவே

- சிதம்பரமும்ம.11

**இலக்கணக் குறிப்பு :** உனை - இடைக்குறை. மலர்த்தாள் - உவமைத் தொகை. பச்சைக் கிள்ளை - உருவகம்.

4. **அஞ்சுகக் குஞ்சைஒரு பஞ்சரம் அடைத்துவைத்(து)**
**ஆதரித்(து) அமுதம்ஊட்டி**
**அருமையுட னேஎடுத்(து) அருகிருந் தேமொழிகள்**
**அனுதினம் கற்பித்துமே**
**கொஞ்சுமவர் பார்த்திடக் கொடியபூ னையும்ஒன்று**
**கொன்றுமே தின்றகதைபோல்**
**கொழுங்கேவ லத்தில்ஆழ்த் தியஎனைச்**
**சகலம்கொ டுத்(து)அருளி னால்வளர்த்த**

வஞ்சிஉன் தாளிணைகள் தஞ்சமென நாடாத
மாய்கையில் அழுந்தலாமோ
வாஎன்(று)அ ழைத்(து)உன்னருள் உயர்சுத்தம்
ஆகுநல்
வாழ்வுதந்(து) ஆளும்அம்மா
குஞ்சரக் கூட்டம்அமர் பூவாளி யூர்தனில்
கொன்றையொடு தும்பைமுதலாக்
கொங்குலவு தொங்கல்அணி சங்கரன் பங்கில்வளர்
குங்குமாம் பிகைவல்லியே.

**குறிப்புரை :** குஞ்சரம் = யானை. அஞ்சுகம்=கிளி. பஞ்சரம் = கூடு. கொழும் = செறிந்த. கேவலம்=ஆன்மா தனது முதற் பிறப்புக்கு முன் உடலோ உறுப்போ ஏதுமின்றி ஆணவ இருளில் கிடந்தநிலை - தனித்தநிலை. சகலம் உயிரின் பிறப்பு நிலை. மாய்கை=இறப்பு. உயர் சுத்தமாகும் நல்வாழ்வு = மிக உயர்ந்த தூயநிலையாகிய பதிமுத்தி - வீடுபேற்று நிலை.

**பொழிப்புரை :** யானைக் கூட்டம் வாழும் பூவாளூரில், கமழும் கொன்றைமலர் மாலையுடன் தும்பை மலர் மாலையும் அணிந்த அருள்தரு திருமூலநாதன் இடது பாகம் பிரியாத அருள்தரு குங்குமாம்பிகைக் கொடியே! கூட்டில் அடைத்து வைத்திருந்த ஒரு கிளிக்குஞ்சினைத் தூக்கி அன்புகாட்டி, நாளும் உரிய உணவுகளை ஊட்டி, அருமையாகப் பக்கத்தில் வைத்துக்கொண்டு,அதற்குப் பேசக் கற்றுக்கொடுத்துக் கொஞ்சும் ஒருவர் காண,அக்குஞ்சினை எமனாகிய ஒருபூனை கொன்றுதின்ற கதைபோல, ஆணவ இருள் செறிந்த கேவல நிலையில் கிடந்த எனக்குச் சகலநிலை அருளி - பிறப்பு அருளி உலகின்பங்களை எல்லாம் வழங்கி வளர்த்த வஞ்சிக்கொடி யாகிய உன்திருவடிகளைச் சரணடையாத என்னை இறப்பில் அழுத்துதல் நலமன்று. என்னை வாஎன்று அழைத்து உன் திருவருளைத் துய்த்தல்ஆகிய சுத்தநிலை-வீட்டின்பப் பெருவாழ்வு தந்து ஆள்வாயாக.



**விளக்கம் :** அஞ்சுகக்குஞ்சு-ஆன்மா. கூட்டில் அடைத்தல் - கேவல நிலையில் இருத்துதல். எடுத்து ஆதரித்து ..... கொஞ்சுதல் - எடுத்துச் சகலநிலை - பிறப்பு அருளல் - உடல், கருவிகள் உலகம் அனுபவப் பொருள்கள் தந்து மகிழ்வித்தல். மாய்கையில் அழுத்துதல் - இறப்பில் அழுத்துதல். சுத்தமாகு நல்வாழ்வு வேண்டல் - வீட்டின்பம் அருள வேண்டுதல்

**இச்செய்யுளின் கரு:**

காரிட்ட ஆணவக் கருஅறையில் அறிவற்ற
கண்இலாக் குழவி யைப்போல்
கட்டுண்டு இருந்தஎமை வெளியில்விட்டு அல்லல்ஆம்
காப்புஇட்டு அதற்கு இசைந்த
பேரிட்டு மெய்என்று பேசுபாழ்ப் பொய்யுடல்
பெலக்கவிளை அமுதம் ஊட்டிப்
பெரியபுவ னத்திடைப் போக்குவரவு உறுகின்ற
பெரியவிளை யாட்டுஅ மைத்திட்டு
ஏரிட்ட தன்சுருதி மொழிதப்பி நமனைவிட்டு
இடர்உற உறுக்கி இடர்தீர்த்து
இரவுபகல் இல்லாத பேரின்ப வீட்டினில்
இசைந்துதுயில் கொண்மின் என்று
சீரிட்ட உலகன்னை வடிவாய எந்தையே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தட்சிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே

- தாயுமா. சின்மயானந்தகுரு. 6.

**இலக்கணக் குறிப்பு :** இச்செய்யுள் உவமையணி

5. புல்ஆதி தாவர சங்கமங் களில்எலாம்
புக்கியே பலநாள்தொறும்
புண்ணியம் இன்றியே மானிடப் பிறவியில்
பூமியில் உற்பவித்தும்

பொல்லாத இல்லறத் தொல்லையால் எல்லையில்
புன்கணுற்று) எய்த்துநாளும்
பூவைமார் தங்களின் பொய்மயல் புக்கியே
போதுபோக் கிக்களிக்கும்
கல்லாத புல்லனேன் என்னினும் நின்பதக்
காட்சிதந்(து) அருளுவாயால்
கம்பநதி தன்னிலே உம்பர்முதல் யாவரும்
கண்டுதொழ நின்றதாயே
கொல்லாத விரதம்வளர் பூவாளி யூர்தனில்
கொன்றையொடு தும்பை முதலாக்
கொங்குலவு தொங்கல்அணி சங்கரன் பங்கில்வளர்
குங்குமாம் பிகைவல்லியே.

**குறிப்புரை :** கம்பநதி = காஞ்சி நகரின்கண் அம்மை, ஆண்டவனை எழுந்தருளச் செய்து வழிபட இடமாய் அமைந்த தோராறு. தாவர சங்கமம் = நிலைத்திணை இயங்குதிணை = புல்முதல் மரம்ஈறாக ஓடத்திலேயே நிலைத்திருந்து உயிர் வாழ்வனவும், புழு முதல் மனிதன் ஈறாக இடம் பெயரும் வாய்ப்புடையனவும். புக்கி=பிறந்து,வீழ்ந்து.

**பொழிப்புரை :** காஞ்சிபுரத்துக் கம்பா நதியில் தேவர்கள் முதலிய யாவரும் கண்டு வணங்கச் சிவபூசை செய்து பெருமானைத் தழுவிய தாயே! கொல்லாவிரதம் வளரும் பூவாளூரில் கமழும் கொன்றைமலர் மாலையுடன் தும்பை மலர்மாலை அணிந்த சங்கரனாகிய அருள்தரு திருமூலநாதரின் இடதுபாகம் பிரியாத அருள்தரு குங்குமாம்பிகை ஆகிய கொடியே! புல்முதலான நிலைத்திணை இயங்குதிணை ஆகிய பிறவிகள் தோறும் செய்த புண்ணியப் பயனால் மனிதனாக இவ்வுலகில் பிறந்துங்கூட, துன்பம்தரும் இல்லறத் தொல்லையால் எல்லையற்ற துன்பமுற்று மனம் களைத்தும், நாடோறும் விலைமாதரது பொய்யான மயக்கில் வீழ்ந்து பொழுது போக்கியும் களிக்கின்ற அற்பனாய், அறிவற்றவனாய் நான் இருப்பினும் உனது திருவடிக்காட்சி தந்து அருள் புரிவாயாக.



**விளக்கம் :** புல்லாதி .....எய்த்தல் -

புல்லாகிப் பூடாய் புழுவாய் மரமாகி.....
எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்

- சிவபுராணம்.

பொய்மயக்கில் புக்கி :

. . . . . யாவரேனும் கண்வலைப்பட்டுநெஞ்சம்
அழிபவர் பொருள்கொண்டு எள்ளுக்கு
எண்ணெய்போல் அளந்து காட்டிப்
பழிபடு போகம் விற்பார்....

- திருவிளையாடற்.நகரச்சிறப்பு.46.

புல்லனேன் என்னினும் காட்சி தந்தருளுவாய் :

பொல்லாத சேய்எனில் தாய்தள்ளல் நீதமோ புகலிடம்
பிறிதும் உண்டோ - தாயுமா.சுகவா.3.

கம்ப நதி தன்னிலே....நின்ற தாயே :

நண்ணி யாவரும் நாயகி தழுவிடக் குழைந்த
அண்ண லார்திருக் கோலம்நேர் கண்டுகண்டு ஆர்த்தார்
விண்ணி றைந்தபே ரானந்த வெள்ளத்தில் நிறைந்தார்
கண்ணி ணாற்பெறு பெரும்பயன் கைவரப் பெற்றார்

- காஞ்சிப்பு.தழுவக்குழைந்த.396.

**இலக்கணக் குறிப்பு :** மானிடப் பிறவி = இனம்விலக்கிய அடைபெற்றது.

6. மண்தலம் தன்னிலே கண்கண்ட தெய்வநீ
மற்றும்ஓர் தெய்வம்உண்டோ
மந்திரம்எ லாம்உனது திருவுருவ மேயலால்
வசனிக்க வேறும்உளதோ
அண்டர்முதல் யாவர்களும் உன்அருளி னால்அலோ
அரியபர கதிஎய்தினார்
அங்கும்இங் கும்அலைந்(து) அவையர்கண்
வலையினால்
அடியனேன் எய்த்துநின்றேன்

வண்டர்இசை தண்துழாய் மாயன்ஒரு தங்கையே
மலைஅரையன் ஈன்றமகளே
மாதேவி யேஉனது பாதமே நம்பினேன்
வந்தென்னை ஆட்கொள்ளுவாய்
கொண்டல்மிகு சோலைசூழ் பூவாளி யூர்தனில்
கொன்றையொடு தும்பை முதலாக்
கொங்குலவு தொங்கல்அணி சங்கரன் பங்கில்வளர்
குங்குமாம் பிகைவல்லியே.

**குறிப்புரை :** மண்தலம்=பூவுலகு. வசனிக்க = சொல்ல. அலோ=அல்லவா. வண்டர்=வண்டுகள்.

**பொழிப்புரை :** மிக்க மேகம் படியும் சோலைகள் சூழ்ந்த பூவாளூரில் மணக்கும் கொன்றை மலர் மாலையுடன் தும்பை மலர் மாலை சூடிய சங்கரனாகிய அருள்தரு திருமூலநாதரின் இடதுபாகம் பிரியாத அருள்தரு குங்குமாம்பிகைக் கொடியே! இப்பூவுலகில் உன்னைத் தவிர வேறு கண்கண்ட தெய்வம் இல்லை. அனைத்து மந்திரங்களும் உன்திருவுருவே அல்லாமல் சொல்லத்தக்க வேறு மந்திரம் இல்லை. தேவர்கள் முதலிய அனைவரும் உனது அருளாலல்லவா மேலான கதியினைப் பெற்றனர். நான் கண்டபடி அலைந்து பரத்தையரது கண்வலையில் சிக்கிச் சோர்ந்தேன். வண்டுகள் முரன்று மொய்க்கும் தண்ணிய துளசிமாலை அணிந்த திருமாலுக்குத் தங்கையே! இமவானுக்கு மகளே! மாதேவியே!நான் உன் திருவடிகளையே நம்பியுள்ளேன். நீயேவந்து என்னை ஆட்கொண்டருள்க.

**விளக்கம் :** மண்தலம் = அணுச்செறிந்த இவ்வுலகம். (மண்=அணு.புறம்.2.பழையவுரை)

**அங்கும் இங்கும் அலைதல் :**

அலையடி அடைந்த அகத்துஅடி நிலையாது
அலைஅடிநாயேன்: - அகிலாண்ட நாயகி மாலை.18.

**மாயன் ஒரு தங்கையே :**

செங்கண்மால் திருத்தங்கச்சியே - அபிராமி அந்தாதி.61.



அலையாழி அறிதுயிலும் மாயனதுதங்கையே
- அபிராமி அம்மை பதிகம்.1.

**இலக்கணக் குறிப்பு :** உண்டோ, உளதோ - எதிர்மறை ஓகாரங்கள். அல - அல்ல என்ற குறிப்புப் பெயரெச்சத்து இடைநின்ற லகரம் கெட்டது. வண்டர் - கடைப்போலி. யாவர்களும் - முற்றும்மை.

என்தேடலில் கிடைத்தவை இந்த ஆறு செய்யுட்களே.
திருச்சிற்றம்பலம்.

## பூவாளூர்
## அருள்தரு குங்கும சுந்தரி அம்மை பதிகம்

ஆசிரியர் குன்றக்குடி ஆதீனப்புலவர். தமிழாகரர்.
சைவத்தமிழ்மணி
பூவாளூர் . வித்துவான் க. கதிரரேசன் எம்.ஏ., பிளட்.,

1. உலகத் (து) உயிர்கள் உய்திபெற உயிராய் நிற்கும் எம்உயிரே
ஓங்கிப் பரந்து விரிந்(து)எவையும் உள்ளே அடக்கும் பெருவானே
நலங்கள் யாவும் நயந்தளிக்க நாடிஎழுவான் செங்கதிரே
நாடும் விழிக்கும் மனத்துக்கும் நயமே கொழிக்கும் தண்ணிலவே
நிலவும் வளங்கள் நீடுபொறை நிற்கும் நிலமே வளிதீயாய்
நீராய்ப் பரந்து கருணையதே நிகழ்த்தும் குங்கும சுந்தரியே
பலவாய் யாம்கேள் வரம்பலவும் பரிந்தே அளிக்க வருகசிவன்
ப்ாகம் பகிர்ந்த பூங்குயிலே பாவாய் வருக வருகவே.

2. நவமணி தம்மொடு வைரம் இழைத்த நன்பொன் சிலம்போடு
நடைபயில் தோறும் கிண்கிணி பிறவும் நலமே தாம்முழங்க
இவளுக் குண்டோ இலையோ எனும்இடை இய்மே கலைமுரல
எழிலார் வளைகள் எழுந்தும் தாழ்ந்தும் இனிமைக் குரல்எழுப்ப
தவளத் தோள்வளை முத்துகு லுங்க தவழ்மலர் மாலைஎலாம்
தண்என எங்கும் நன்மணம் பரப்பித் தாழ்ந்து தாழ்ந்தசையத்
துவளும் பூங்குழல் வண்டுகள் மேல்எழத் தொடிஅணி கைவீசித்
துங்கத் தாயே குங்கும சுந்தரி தொழுதோம் வருகவையே.

**குறிப்புரை :** *தொடி=வளையல். துங்கம்=வெற்றி.*

3. நாடெலாம் காத்ததுடன் நலமெலாம் செய்திட்ட
நல்வணிகன் மஞ்சுளன்தன்
நயக்குமகள் பூங்கொடி நற்காந்தி மதிஅவளை
நாடிய கல்விகேள்விக்
கோடெலாம் கொண்டதிரு முதுகுன்றப் பெருவணிகன்
சந்த்ரகுப் தன்தனக்குக்
கொள்கையுயர் காளையாம் கொண்டபே ரழகனாம்
சந்த்ரகு டப்பெயரினான்
ஆடெலாம் பெறுமவனை அணையஒரு சித்தராய்
அவர்மணம் முடித்திட்டவன்
அழகிஉன் உள்ஆளும் திருமூல நாதரென
அறிதலால் உனையடைந்தோம்
வீடெலாம் மங்கலம் வீறுடன் பொலிதர
விரைந்தருள் செய்தளிக்க
வெற்றிகள் சேர்ந்திடக் குங்கும சுந்தரீ
விரைந்(து)எழுந் தருளுநீயே.

**குறிப்புரை :** *(கோடு=கூட்டம். அன்று திருமுதுகுன்றம், இன்று விருத்தாசலம். ஆடு=வெற்றி.)*

4. அண்ணலார் திருமூல நாதனார் தம்பாதப்
பொன்னஞ்சி லம்பெறிதலால்
அம்பொன் கொழித்துவரு பொன்னியின் கரையில்வீழ்ந்(து)
அங்குகங் கையைஅழைக்கத்
தண்மையுறு பொன்னியுடன் கயையும்க லத்தலால்
தழைத்(து)ஏறி வந்துபாய்ந்து
தலையசைத் தேவளர் நெல்விளையும் நிலம்எலாம்
தக்கஅள வாகநின்று
புன்மைதரு களைஎதும் தலைஎடா வகைசெய்து
போற்றிப்பு ரந்தருளல்போல்



புகலரிய நின்கருணை நீர்பாய்ச்சி எம்முளம்
புரந்துநின் கடைக்கநோக்கில்
நன்மைத்தி றங்களை நாடொறும் நின்கொழுநன்
நன்களிக் கின்றதேபோல்
நலந்தரல் வேண்டியாம் நாடினம் நின்பாதம்
நயந்துநீ தருகஇன்றே.

**குறிப்புரை :** *நிலம் - உள்ளம். நெல் - புண்ணியம். களை - பாவம். நீர் - கருணை. ஏகதேச உருவகம்*

5. நந்(து)ஊரும் வயல்கள்சூழ் பூவாளி யூரெனும்
நற்றலம் மேவியருளும்
நம்பிரான் திருமூல நாதரின் நல்இடம்
நயந்(து)உறை கின்றதாயே
அந்தம்உறும் திருமார்பில் அணிபெறும்பொன்மாலை
அமைவுறும் வைரமெல்லாம்
அமுதான நின்திரு முகஒளியைத் தாம்காட்டி
அவிர்தலும் அழகென்பதால்
சுந்தரீ நின்அழகை அவற்றுளும் கண்டுமனம்
கொண்டுயாம் களிக்கவந்தோம்
துயரெலாம் தீரவும் துன்பங்கள் பாறவும்
சுகமெலாம் பெற்றுய்யவும்
வந்தனை செய்கிறோம் வாழ்விப்ப(து)உன்கடன்
வந்(து)அணை எம்உளத்தும்
வடிவான வாழ்விலே வாழ்விக்கும் நின்னருள்
வழங்குக எமதுதாயே.

**குறிப்புரை :** *நந்து=சங்குப்பூச்சிகள். பாற=அழிய.*

6. அன்பர்கள் உள்ளம் களிகொள ஆடும்
அம்தோ கைமயிலே
அண்டச ராசரம் இன்புற மழைபொழி
அழகுதவழ் முகிலே

நின்னருள் தனையே நீளநி னைப்பவர்
நினைவுக் கொருதேனே
நீடுபெ ருந்துயர் தீர்க்கஎ முந்திவண்
நிலவும் நல்லமுதே
உன்னைநி னைப்பவர் உள்ளொளி கொள்ள
உதிக்கும் செங்கதிரே
ஒழியாப் பிறவி நோய்தீர்த் தருள
ஒளிரும் உயர்மருந்தே
குன்றென நின்றஎம் குறைகள் தீர்த்தருள்
கொழிக்கும் கற்பகமே
குங்கும சுந்தரித் தாய்நின் தாள்உறல்
குறியாக் கொளஅருள்வாய்.

**குறிப்புரை :** குறி=வாழ்க்கைக்குறிக்கோள்.

7. அம்பொன் பதித்த நவமணிகள்
அழகே விரியும் முடிபோற்றி
அவிரும் பிறையாய் ஒளிர்நுதலில்
அருங்குங் குமதில கம்போற்றி
இம்பர் உயிர்கள் ஈடேற்றும்
எழிலார் கருணைக் கண்போற்றி
ஏத்து வார்க்கு வாழ்த்தியம்பி
இன்பம் சேர்செவ் வாய்போற்றி
நம்பும் அடியார் சொல்கேட்க
நயக்கும் குழைசேர் செவிபோற்றி
நாளும் அபயம் வரதம்அளி
நளினச் செம்மைக் கரம்போற்றி
எம்மை ஆளற்(கு) எழுந்தருளி
இருக்கும் குங்கும சுந்தரிநின்
இணைதண் எழிலார் திருவடிஎன்
இதயத் திருத்தி அருள்போற்றி.



**குறிப்புரை :** இம்பர்=இவ்வுலகம். நளினம்=தாமரை. இணை = இரண்டு.

8. சிவனது திருஉளம் மன்னுவை
சீர்தர அவனைஉள் கொள்ளுவை
சீவர்கள் உள்ளும்நீ உறைகுவை
சிறுபொருள் தம்முளும் நிறைகுவை
அவனிகள் யாவையும் ஆக்குவை
அனைத்தையும் ஒருத்தியாய்க் காக்குவை
அவற்றைநீ நொடியினில் அழிக்குவை
அவைஇளைப் பாறவே மறைக்குவை
நவைஎலாம் தீர்த்தருள் செய்குவை
நாடுபே ராற்றலின் வடிவினை
நலந்தரப் பல்லுருக் கொள்ளுவை
நண்ணினார் தமைஎலாம் தாங்குவை
இவண்எமக்(கு) அருள்தர வந்தனை
இனி(து)அருள் குங்கும சுந்தரீ
எம்பிழை பொறுத்தெமை ஆண்டருள்
ஈடிலா நின்அருள் தந்தருள்.

**குறிப்புரை :** சிவனது . . . மன்னுவை கடையூழிக் கண்ணது. அவனை உட்கொள்ளுவை: ஐந்தொழில் புரியும் காலத்தது. ஆக்குவை, காக்குவை, அழிக்குவை, மறைக்குவை, அருள் செய்குவை என்பன, அம்மைபுரியும் ஐந்தொழில் குறிப்பன. நவை = குற்றம்.

9. உன்னை உளங்கொண்டந் நாளில் ஓங்கிய
உனது திருநாட்டின் நிலைகாணாய்
ஓடி வரும்இமய ஆறு களில்வெள்ளம்
ஓங்கு நீர்ப்பஞ்சம் தென்னாட்டில்
தன்மை நினையாத கள்ளப் படைஎடுப்பால்
தருக்கு வெடிப்புகளால் நல்லோர்போல்
தாங்கு நிலைகாட்டித் தள்ளி விடமுயன்று
தண்டச் செயல்புரியும் அயல்நாட்டார்

அண்டை அயலாராய் ஒன்ற மனமில்லா
அழுக்குக் கலவரத்தின் நெடிஎங்கும்
அடிப்பர் பெருங்கொள்ளை உழைக்க மனமில்லார்
அடவிநரிபுலிநாய் எலியாவார்
இன்ன எமதுதுயர் தீர எடுத்தாள்க
இனிய திருவுளத்தின் எண்ணத்தால்
ஏற்ற பேராற்றல் இனிய உள்ளங்கள்
எங்கும் ஒளிரநீ வருவாயே.

**குறிப்புரை :** நரி = தந்திரசாலிகள், புலி=கொலைபு குணத்தர், நாய்=இனப்பகைஞர், எலி=திருடர் குறிப்பன.

10. துன்று ஞானம் பேராற்றல்
துவளாநிலையில் ஒன்றிடுமேல்
தோன்றும் மேன்மை என்றும்எனும்
தொன்மை நெறியைக் காட்டற்கா
என்றும் யாவும் முற்றுணர்ந்த
எந்தை ஞானத்(து) எண்குணத்தன்
இதயக் கொலுவில் ஆற்றல்என
இருக்கும் நீஎம் தாய்அலவோ
நின்ற உன்பே ராற்றலினில்
நெகிழ்ந்தே எம்மீ(து) இரக்கத்தால்
நீடும் ஞானம் நெஞ்சேந்தி
நிகரில் ஐந்து தொழில்புரிவாய்
அன்பார் அப்பன் உளம்நிறைந்த
அன்னை குங்கும சுந்தரிநீ
அடியோம் உளத்தும் குடிகொண்(டு)உன்
அருளைத் தெளிக்க வேண்டுகிறோம்.

**குறிப்புரை :** அம்மை ஆற்றல் வடிவினள். அப்பன் ஞானவடிவன். இவற்றின்கூட்டுறவே ஐந்தொழில்.

திருச்சிற்றம்பலம்

✦ ✦ ✦